


தமிழ்த் தேசியச்



# செங்கொடி

அரசியலை ஆணையில் வையுங்கள் –மாவோ



இதழ்–3 ஜூலை, ஆகஸ்ட் –2019 (தனிச் சுற்றுக்கு மட்டும்) விலை ரூ.20/–


# திராவிட மாயை

–தோழர் சு (எ) சுந்தரம்



தோழர் சுந்தரம் அவர்களின் இரண்டாமாண்டு செவ்வணக்க நாள் நிகழ்ச்சியில் தமிழ்த் தேசியப் பாதுகாப்பு இயக்கத்தின் கொடி வடிவமைக்கப்பட்டது. பாட்டாளி வர்க்கத் தலைமையை குறிக்கும் வகையில் செங்கொடியையும் இயக்கத்தின் இலட்சியங்களான

- சோஷலிச நெறி
- தமிழ்த் தேசியம்
- புதிய ஜனநாயகம்
- உழவர் திட்டம்
- புதிய சமூக நீதி

ஆகியவற்றை குறிக்கும் வகையில் ஐந்து வெள்ளை நட்சத்திரங்களையும் கொண்டதாக கொடி வடிவமைக்கப்பட்டுள்ளது.

ஆசிரியர்: சுவை. முருகேசன்

முகவரி: தமிழ்த் தேசியச் செங்கொடி, வடக்கு தெற்கு வீதி, இராஜா திரையரங்கம் அருகில், பெண்ணாடம்,

திட்டக்குடி வட்டம், கடலூர் மாவட்டம்–606 105.

95247 09860 tnpmov tnsenkodi.blogspot.com




# மக்களே போராடுவோம்

ஹைட்ரோ- கார்பன் திட்டத்திற்கு ஆய்வு செய்ய இந்திய அரசால் அனுமதியளிக்கப்பட்டு வெளியிடப்பட்ட அறிவிப்புகளையும், அத்திட்டத்தினால் ஏற்படும் அபாயங்களையும் விளக்கி 'நெய்தலும் பாலையாகும்' எனும் கட்டுரையை கடந்த இதழில் வெளியிட்டிருந்தோம். அதன் தொடர்ச்சியாக இக்கட்டுரையை வெளியிடுகின்றோம்.

கடந்த மே மாதம் பாராளுமன்ற மற்றும் சட்டமன்ற இடைத் தேர்தல் நடைபெற இருந்த காலங்களில் வேதாந்தா நிறுவனத்திற்கு அனுமதி வழங்கப்பட்டிருந்த இரண்டு மண்டலங்களில், மரக்காணம் முதல் கடலூர் வரையிலான முதல் மண்டலத்தில் 116 எரிவாயு எடுக்கும் கிணற்றினை அமைக்க ஆய்வு செய்யவும், பரங்கிப்பேட்டை முதல் வேளாங்கண்ணி வரை இரண்டாவது மண்டலத்தில் 158 கிணறுகள் அமைக்க ஆய்வு செய்யவும் அனுமதி அளித்தது இந்திய அரசு.மேலும் ஓ.என்.ஜி.சி. நிறுவனத்திற்கு குள்ளஞ்சாவடி முதல் வைத்தீஸ்வரன்கோயில் வரை உள்ள தரைப் பகுதியில் 67 கிணறுகளை அமைக்க ஆய்வு செய்யவும் அனுமதி அளித்துள்ளது.

ஹைட்ரோ- கார்பன் திட்டத்தின் ஒரு பகுதியாக நாகை மாவட்டம், மாதானம் முதல் மேமாத்தூர் வரை 29 கிலோமீட்டர் நீளத்திற்கு கெயில் நிறுவனத்தின் எரிவாயு கொண்டு செல்லும் ராட்சத குழாய்களை விளைநிலங்களில் பதிக்கும் வேலையை முடித்துள்ளது.

இக்குழாய் பதிப்பிற்காக விவசாயிகளிடம் எந்த ஒரு கருத்துக் கேட்பு கூட்டமும் நடத்தப்படாமலேயே சாகுபடி செய்யப்பட்டிருந்த விளைநிலங்களில் இருந்த நெற்பயிர்களை அழித்து, அவ்விடங்களில் குழியை தோண்டி, இக்குழாய்கள் பதிக்கப்பட்டு இருக்கின்றன. இவை நடந்த நாட்கள் தேர்தலை ஒட்டிய நாட்களாக இருந்ததால் மக்களும் ஆதரவற்று நிற்கதியாக்கப்பட்டிருந்தனர்.

மேற்கூறப்பட்ட தகவல்கள் யாவும் செய்தித்தாள்கள், சமூக வலைதளங்கள், தொலைக்காட்சி மற்றும் பல்வேறு போராட்ட இயக்கங்களின் துண்டறிக்கைகள் மூலமாக தாங்கள் அறிந்தவையே. தேவை என்னவெனில் ஹைட்ரோகார்பன் திட்டத்திற்கு எந்தெந்த பகுதிகளில் அனுமதி வழங்கப்பட்டுள்ளது, அவற்றால் என்னென்ன விளைவுகள் உண்டாகும் என்பதை விளக்கிக் கூறுவது மட்டுமல்ல. மாறாக இத்திட்டத்தை தடுத்து நிறுத்துவதேயாகும்.

### என்ன செய்ய வேண்டும்?

இயற்கை வளங்களை சுரண்டும் ஏகாதிபத்தியங்கள், தமிழ்நாட்டின் உழவர்கள் மற்றும் மீனவர்களின் மீது தொடுக்கப்பட்ட போராகவே இந்நாசகார ஹைட்ரோ-கார்பன் திட்டம் உள்ளது. இதற்கு அனைத்து ஏகாதிபத்தியங்களுக்கும் சேவை செய்யும் இந்திய ஆளும் வர்க்கங்களும், தமிழக ஆட்சியாளர்களும் அப்பட்டமாக துணைபோகின்றனர். ஏகாதிபத்தியத்திற்கு எதிரான உழவர்கள் மற்றும் மீனவர்களின் இப்போராட்டம் தவிர்க்க முடியாத அளவில் இரண்டு போராட்டங்களுடன் இணைக்கப்பட வேண்டிய கட்டாயத்தில் உள்ளது.

ஒன்று ஹைட்ரோகார்பனுக்கு எதிரான இப்போராட்டம் வெறும் இத்திட்டத்திற்கு எதிரான போராட்டமாக மட்டுமே இல்லாமல் இப்பகுதியில் நிலவும் அரை-நிலப்பிரபுத்துவ கட்டமைப்பிற்கு எதிரான போராட்டமாகவும் நீட்டிக்கப்பட வேண்டும்.

இப்பகுதிகளில் உள்ள நிலங்கள் யாவும் முதலாளிய நிலவுடமையாளர்களின் நிலங்களாகவும், மடங்கள் மற்றும் கோவில்களுக்கு சொந்தமான நிலங்களாகவும், பெரும் பணக்காரர்களின் பினாமி மற்றும் அறக்கட்டளையின் நிலங்களாகவும் உள்ளன. ஆங்காங்கே துண்டு துக்காணியாக சிறு, குறு உழவர்கள்களிடமும் நிலங்கள் உள்ளன.

இப்போராட்டம் சாராம்சத்தில் இங்கிருக்கும் நிலத்தின் மீதான அதிகாரம் உழவர்களுக்கா? அல்லது ஏகாதிபத்திங்களுக்கா? என்ற போராட்டமேயாகும். ஆனால் மறுக்க முடியாத அளவில், இங்கு ஏற்கனவே உழவர்களுக்கு நிலத்தின் மீதான அதிகாரம் இல்லை. அது பெரும் பணக்காரர்களிடமும், மடங்களிடமும் சிக்கிக் கொண்டுள்ளது. இதனாலேயே இப்போராட்டங்களில் நிலமற்ற கூலி விவசாயிகளும், குத்தகை விவசாயிகளும் அதிக ஆர்வம் காட்டுவதில்லை. ஆனால் ஏகாதிபத்தியத்திற்கு எதிரான போராட்டத்தில் இவர்களே முன்னணி சக்தியாவர்.

நிலப்பிரபுக்களிடமும் மடங்களிடமும் உள்ள நிலங்களை கைப்பற்றி, அதனை நிலமற்ற கூலி, ஏழை விவசாயிகளுக்கும் குத்தகை விவசாயிகளுக்கும் அளித்திடும் போராட்டமாக இவை இருக்க வேண்டும். ஏனெனில் நிலத்தின் மீதான உரிமை நிலப்பிரபுக்களிடமும், மடங்களிடமும் இருக்கும் பட்சத்தில் நாம் எவ்வளவுதான் போராடினாலும் ஹைட்ரோகார்பன் திட்டத்தை தடுத்து நிறுத்த இயலாது. அதேபோல் உழவர்களால் கைப்பற்றப்பட்ட நிலங்களும் தனிமனிதர்களின் சொத்துக்களாக இல்லாமல் கூட்டுறவு பண்ணைகளாக மாற்றப்பட வேண்டும். அப்போதுதான் போராடிப் பெறும் உரிமைகளை தொடர்ந்து தக்க வைத்துக்கொள்ள முடியும்.

இரண்டாவதாக இப்போராட்டம் தேசிய விடுதலைப் போராட்டத்துடன் இணைக்கப்பட வேண்டும். வெள்ளையர்கள் உருவாக்கி வைத்த இந்தியாவிற்கு வெள்ளையர்கள் காலம் முதலாகவே தமிழ்நாடு அடிமை நாடாக உள்ளது. தமிழ்நாடு, இந்திய தரகு முதலாளிகளாலும் ஏகாதிபத்தியத்தாலும் ஒடுக்கி சுரண்டப்படுகிறது. அதன் ஒரு பகுதிதான் ஹைட்ரோ-கார்பன், எட்டுவழிச் சாலை, அணுவுலைகள், பெட்ரோ-கெமிக்கல் மண்டலம், ஸ்டெர்லைட் தொழிற்சாலை, கெயில் குழாய் பதிப்பு, நியூட்ரினோ ஆய்வு மையம்,.. ஆகிய நாசகாரத் திட்டங்களாகும்.

இவ்வனைத்து நாசகாரத் திட்டங்களுக்கு எதிரான போராட்டங்களும் ஒன்றிணைக்கப்பட வேண்டியதும், அதேசமயம் இப்போராட்டங்கள் ஏகாதிபத்தியத்தையும் இந்திய ஆளும் வர்க்கத்தையும் எதிர்த்த தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டத்துடன் இணைக்கப்பட வேண்டியதும் அவசியமாகும். இல்லையேல் நாம் எவ்வளவுதான் போராடி இத்திட்டங்களை திரும்பப் பெற செய்தாலும், அவை சில காலத்திற்குப் பின்னர் வேறு ஒரு பெயரில் மீண்டும் நம்மீது திணிக்கப்படும். ஏற்கனவே நாம் போராடி விரட்டியடித்த மீத்தேன் திட்டத்தின் மற்றொரு புனையப்பட்ட வடிவம்தான் இந்த ஹைட்ரோ கார்பன் திட்டம் என்பது குறிப்பிடத்தக்கது.

மீத்தேன் திட்டத்திற்கு எதிரான போராட்டம் நீதி மன்றங்களையும் சட்டமன்றங்களையும் நம்பி கைவிடப்பட்டது. அதனாலேயே அத்திட்டம் மீண்டும் ஹைட்ரோ-கார்பன் திட்டமாக உருமாறி நம் மீது திணிக்கப்படுகிறது. எனவே நீதிமன்றங்களிங்களிலோ அல்லது சட்ட மற்றும் பாராளுமன்றங்களிலோ இதற்கான தீர்வை அடைய முடியாது. அப்படியே அடைந்தாலும் அது தற்காலிகமானதே.

ஹைட்ரோ கார்பன் திட்டத்திற்கு எதிரான இப்போராட்டத்தில் நிரந்தரத் தீர்வை நோக்கி நாம் நகர வேண்டுமேயானால், தமிழகப் பாட்டாளி வர்க்கத்தின் தலைமையில் நடத்தப்படும் தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டத்துடனும் நிலப்பிரபுத்துவத்திற்கு எதிரான போராட்டத்தினுடமும் இப்போராட்டம் இணைக்கப்பட வேண்டும். அப்போதுதான் இம்மாதிரியான நாசகார திட்டங்களில் இருந்து நமக்கு நிரந்தர விடுதலை கிடைக்கும்.

**ஹைட்ரோ-கார்பன் உள்ளிட்ட நாசகார திட்டங்களை எதிர்த்து போராடுவோம்!**

**உழவர், மீனவர் வாழ்வாதாரங்களை பாதுகாப்போம்!**

**தமிழ்த்தேச விடுதலையை வென்றெடுப்போம்!**

-தோழர் ப.கலை

# ஸ்டெர்லைட் எதிர்ப்பு போராட்டம்

*(தமிழ்த் தேசியத்தின் வளர்ச்சிப் படி)*

**“பாசிசம் என்பது வெறும் அலங்காரச் சொல்லாக இருக்கவில்லை. அது கொடிய யதார்த்தமாக விளங்கியது.” -சமர் சென்**

“அமைதியான வழியில் சோசலிசத்தை நோக்கி முன்னேறுவது” என்ற திருத்தல்வாத சேற்றுக்குள் இந்திய பொதுவுடமை இயக்கங்கள் புதைந்து கிடந்த போது அதனை நக்சல்பாரி புரட்சி மாற்றி அமைத்தது. அப்புரட்சியை ஒடுக்க சி.பி.எம்., காங்கிரஸ் பாசிசக் கூட்டணியில் இந்திய ஆளும் வர்க்கங்கள் நடத்திய நரவேட்டைகளை கண்ட சமர் சென் எழுதியதே மேற்கண்ட வாசகம். பாசிசம் பற்றிய இக்கருத்து நக்சல்பாரி போராட்ட எழுச்சி மீதான ஒடுக்குமுறைக்கு மட்டுமின்றி இந்திய ஆளும் வர்க்கங்களால் ஒடுக்கப்படும் அனைத்து தேசிய இன விடுதலைப் போராட்டங்கள், உழவர் போராட்டங்கள், மற்றும் பழங்குடிகளின் போராட்டங்களுக்கும் பொருந்தும்.

கடந்த ஆண்டு மே 22 அன்று ஸ்டெர்லைட் தொழிற்சாலையை மூடக்கோரி தூத்துக்குடி மக்களால் நடத்தப்பட்ட அறவழிப் போராட்டத்தின் போது நடத்தப்பட்ட துப்பாக்கிச் சூடும் அதன் பின்னர் நடைபெற்ற ஒடுக்குமுறைகளும் அ.தி.மு.க., பா.ஜ.க கூட்டணியின் பாசிச வெறி முகத்தை வெளிக்காட்டியுள்ளது.

கட்சிகள் மாறினாலும் மக்கள் மீதான இந்திய ஆளும் வர்க்கத்தின் ஒடுக்குமுறை மாறவில்லை. இந்திய அரசு எப்பொழுதும் பெருமுதலாளித்துவ வர்க்கத்தின் பக்கச்சார்புடையதாகவும் அதேநேரத்தில் ஒடுக்கப்படும் மக்களின் மீது பலாத்காரத்தைத் திணிப்பதாகவுமே இருந்து வந்துள்ளது. இப்பலாத்காரம் தெலுங்கானா போராட்டம் முதல் தூத்துக்குடி போராட்டம் வரை குறையவே இல்லை. மாறாக அதிகரித்த வண்ணமே உள்ளன.

**ஸ்டெர்லைட்**

தமிழகத்தின் துறைமுக நகரமான தூத்துக்குடியில் 1994ஆம் ஆண்டு வேதாந்தா நிறுவனம் “ஸ்டெர்லைட் காப்பர்” என்ற தாமிர உருக்கு ஆலையை அமைத்தது. ஆப்பிரிக்க மற்றும் ஆஸ்திரேலிய நாடுகளில் இருந்து வெட்டி எடுக்கப்படும் தாமிரத் தாதுவிலிருந்து தாமிரத்தை பிரித்தெடுப்பதே இவ்வாலையின் வேலையாகும். இதைத் தவிர கந்தக அமிலம் உள்ளிட்ட சில உபப் பொருட்களையும் தயாரிக்கிறது ஸ்டெர்லைட் ஆலை.

இவ்வாறு தாமிர உற்பத்தியில் ஈடுபடும் போது ஸ்டெர்லைட் தொழிற்சாலை 3 வழிகளில் சுற்றுச்சூழலை மாசுபடுத்தி வந்தது.

1. தாமிரத்தாதுவை பொதுவெளியில் கையாள்வது

ஆண்டுக்கு 12 லட்சம் டன் தாமிரத் தாதுவை இறக்குமதி செய்தது ஸ்டெர்லைட் தொழிற்சாலை. இவை மைய அரைக்கப்பட்ட துகள்கள் (100 மைக்ரானுக்கும் குறைவானவை) ஆகும். இவை PM 10 மற்றும் PM 2.5 உள்ளிட்ட நுண்ணிய துகள்களை கொண்டவையாக இருந்தன. தூத்துக்குடி துறைமுகத்திலிருந்து ஸ்டெர்லைட் ஆலை அமைந்துள்ள இடம் வரை இத்தாமிரத் தாது சாலை வழியே கொண்டுவரப்பட்டது. துறைமுகத்தை சுற்றியுள்ள பகுதிகளில் அடர்த்தியாக படிந்திருக்கும் துகள்கள் யாவும் இந்த தாமிரத் தாதுக்களே. இவற்றில் அடங்கியுள்ள PM 10 மற்றும் PM 2.5 உள்ளிட்டத் துகள்கள் காற்றில் கலந்ததன் விளைவாகவே ஏராளமான தூத்துக்குடி வாழ் மக்கள் ஆஸ்துமா நோயினால் பாதிக்கப்பட்டனர். இத்துகள்களால் குழந்தைகளுக்கு பிரைமரி காம்ப்ளக்ஸ் என்ற நோயும் உண்டானது.

2. தாமிரத்தாதுவை உருக்கும் போது ஏற்படும் புகை

உலைகளில் தாமிரத்தாது வெப்பப்படுத்தப்பட்டு தாமிரமும் கந்தகமும் பிரித்தெடுக்கப்படும் போது வெளியேறும் புகையில் ஆர்சனிக் மற்றும் கந்தக ஆக்சைடு கலந்து வெளியேறுகின்றன. இந்த நச்சுப் புகை தூத்துக்குடி நகரில் காற்றை மாசுபடுத்துவதில் முக்கியப் பங்கு வகிக்கின்றது. கடந்த 2013-ம் ஆண்டு மார்ச் 23ஆம் தேதி காலையில் ஸ்டெர்லைட் ஆலையில் இருந்து இவ்வாயுக்கள் பெருமளவில் வெளியேறியதனால் தான் தூத்துக்குடி நகர பகுதியில் பலர் மயக்கமுற்று விழுந்தனர்.

3. தாமிரக் கழிவு

தாமிரம் பிரித்தெடுக்கப்பட்டதற்கு பிறகு உள்ள கழிவுப் பொருட்களை முறையாக வெளியேற்று வதற்கான எந்த நடவடிக்கையும் இதுவரை ஸ்டெர்லைட் ஆலை எடுத்ததில்லை. மக்கள் வாழும் பகுதிகளில் 40 லட்சம் டன்னுக்கும் அதிகமான தாமிரக் கழிவுகளை மலைபோல கொட்டி நிரப்பி உள்ளது ஸ்டெர்லைட் ஆலை நிர்வாகம். இந்த தாமிரக் கழிவுகள் தூத்துக்குடியின் நிலத்தையும், நிலத்தடி நீரையும், நீர்நிலைகளையும் மாசுபடுத்தின. இவற்றினால்தான் தூத்துக்குடி நிலத்தடி நீர் குடிப்பதற்கு தகுதியற்ற உப்புநீராக மாறியது. இவை மட்டுமின்றி உப்பாற்றின் கிழக்கு கரை முழுவதும் திடக் கழிவுகளை கொட்டி நீர் வழித் தடங்களுக்குத் தடை ஏற்படுத்தப் பட்டதால்தான் கடந்த 2015ஆம் ஆண்டு தூத்துக்குடி நகரமே வெள்ளத்தில் மூழ்கியது.

சுற்றுச்சூழலின் மீது இதுபோன்ற கடுமையான தாக்கத்தை ஸ்டெர்லைட் உருவாக்கியதால் தான் மராட்டியத்தில் உள்ள ரத்னகிரி மாவட்டத்தில் இருந்து ஜூலை 15, 1993 அன்று (அமைக்கப்பட்ட மூன்று மாதங்களில்) ஸ்டெர்லைட் தொழிற்சாலை விரட்டி யடிக்கப்பட்டது. அப்படி விரட்டியடிக்கப்பட்ட ஒரு திட்டத்தைத்தான் 1994ல் அன்றைய முதல்வர் ஜெயலலிதா தூத்துக்குடி சிப்காட் பகுதியில் இடம் ஒதுக்கி ஆலையை அமைத்துக் கொடுத்தார்.

3 ஆயிரம் கோடி ருபாய் மூலதனச் செலவுடன் தொடங்கப்பட்ட ஸ்டெர்லைட் ஆலை தனது வரைமுறையற்ற உற்பத்தியின் மூலமும், குறைந்த சம்பளத்திற்கு ஒப்பந்த தொழிலாளர்களை வேலைக்கு வைத்து சுரண்டுவதன் மூலமும் ஆண்டுக்கு 2,000 கோடி லாபத்தை ஈட்டியது. லாப வெறியில் மூழ்கி போன ஸ்டெர்லைட் நிறுவனம் அதனை மேலும் அதிகரிக்க தனது இரண்டாவது உருக்காலையை தொடங்கத் திட்டமிட்டது. இந்த இரண்டாவது உருக்காலை திட்டத்திற்கு 2010 ஆம் ஆண்டு அப்போதைய தொழில்துறை அமைச்சராக இருந்த ஸ்டாலின் ஏற்கனவே ஆலை அமைந்திருக்கும் பகுதிக்கு அருகிலேயே 230 ஏக்கர் நிலத்தை வழங்கினார். இத்திட்டத்திற்கு தமிழ்நாடு மாசு கட்டுப்பாடு வாரியம் 2017ல் அனுமதியையும் வழங்கியது.இதனை எதிர்த்து கடந்த ஜூலை 18, 2017 அன்று தூத்துக்குடி மக்கள் சுமார் 4000 பேர் இணைந்து ஸ்டெர்லைட் விரிவாக்கத்திற்கு எதிரான மனிதச் சங்கிலி போராட்டத்தை நடத்தினர். ஆனால் இவற்றை சற்றும் மதிக்காத அரசு விரிவாக்கத்தை தடை செய்ய மறுத்தது. எனவே இவ்விரிவாக்கத் திட்டத்திற்கு எதிராக குமரரெட்டியாபுரம் மக்கள் பிப்ரவரி 18, 2018 அன்று தங்களது கிராமத்தில் உள்ளிருப்பு போராட்டத்தை தொடங்கினர். இப்போராட்டமே, மற்ற கிராமங்களுக்கும் பரவி ஸ்டெர்லைட் ஆலையை மூடும் போராட்டமாக 99 நாட்கள் நடைபெற்றது.

## ஸ்டெர்லைட் போராட்டம் தமிழ்த் தேசியப் போராட்டத்தின் வளர்ச்சிப் படி

2009 ஆம் ஆண்டு, தமிழீழ மண்ணில் விடுதலைப் புலிகள் இயக்கத்தின் தலைமையில் வளர்த் தெடுக்கப்பட்ட ஈழ தேசத்தை அனைத்து ஏகாதிபத்தியங்களின் துணைக் கொண்டு சிங்களப் பேரினவாத அரசு அழித்தொழித்தது. இப்போரில் இலட்சக்கணக்கான ஈழமக்கள் கொல்லப்பட்டனர். இதற்கு எதிராக தமிழீழ மக்களின் தொப்புள் கொடி உறவுகளான தமிழ்நாட்டுத் தமிழர்கள் தன்னெழுச்சி யான போராட்டங்களை முன்னெடுத்தனர். தழல் ஈகி முத்துக்குமாரின் மரணமும் அதனையொட்டிய தமிழ்த் தேசிய எழுச்சியும் தமிழக மக்களை வீறு கொண்டு எழச் செய்தன. அவ்வாறு வீறுகொண்டு எழுந்த மக்கள் ஈழத்தின் மீது தொடுக்கப்பட்டப் போரை நிறுத்தக்கோரி ஊர்வலங்களையும் போராட்டங்களை யும் நடத்தினர். ஆனால் போர் நிறுத்தப்படவில்லை மாறாக போராட்டங்கள்தான் தடைசெய்யப்பட்டன. மேலும் பல்வேறு தேர்தல் கட்சிகளின் மூலம் போராட்டங்கள் திசை மாற்றப்பட்டன.

பல லட்சம் தமிழீழ மக்கள் கொல்லப்பட்டு போர் முடிவடைந்த பிறகு ஈழ தேசத்தை அழித்ததில், இந்திய அரசின் பங்கானது மெல்லமெல்ல வெளிவரத் துவங்கியது. இது தமிழர்களுக்கு இந்தியா எதிரி என்பதை அப்பட்டமாக தோலுரித்துக் காட்டியது. தொடர்ச்சியாக, 2014ல் 20 தமிழர்கள் ஆந்திர காடுகளில் சுட்டுக் கொல்லப்பட்டதும், காவிரி மேலாண்மை வாரியம் அமைக்க மறுக்கப்பட்டதும், முல்லை பெரியாறு அணையை இடிப்பதற்கான முயற்சிகள் எடுக்கபட்டதும், பாலாற்றில் பல்வேறு தடுப்பணைகள் கட்டப்பட்டதும், இவை அனைத்திற்கும் இந்திய அரசு துணை போனதும் ‘இந்தியா நேரடியாக தமிழகத்திற்கு பகை கொள்கிறது’ என்பதை தமிழர்கள் உணர ஏதுவாயிருந்தது. இப்படிப்பட்ட காலகட்டத்தில்தான் தமிழர்கள் தங்களின் பண்பாட்டு உரிமைக்கான ஜல்லிக்கட்டு மீட்புப் போராட்டத்தை நடத்தினர். அப் போராட்டத்திற்காக அதுவரை சுற்றுலாத்தலமாக இருந்த மெரினா கடற்கரையை போராட்டக் களமாக மாற்றியது தமிழினம். ஜல்லிக்கட்டு போராட்டம்

வெற்றி அடைந்த அதே நேரத்தில் நீட் தேர்வுக்கு எதிராக குரல் கொடுத்து ஜல்லிக்கட்டு மசோதா நிறைவேற்றப்பட்ட அதே கூட்டத்தொடரில் நீட் தேர்வுக்கு எதிரான மசோதாவையும் சட்டமன்றத்தில் நிறைவேற்ற வைத்தனர் போராட்டக்காரர்கள். இதனைப் பொறுத்துக் கொள்ள முடியாத அரசு காவல்துறையை ஏவி அப்போராட்டத்தை முடிவுக்குக் கொண்டுவந்தது. அதன்பின்னர் மெரினா மட்டுமின்றி எந்த பொது இடத்திலும் மக்கள் கூடுவதற்கு அறிவித்த மற்றும் அறிவிக்கப்படாத தடை நிலவியது.இன்று வரை நிலவியும் வருகிறது.

இதனால் நெடுவாசல் உள்ளிட்ட கிராமங்களில், ஹைட்ரோ கார்பன் எடுக்க அளிக்கப்பட்ட அனுமதிக்கு எதிரான போராட்டங்கள், பொது இடங்களில் நடத்தப்படாமல், அக்கிராமங்களில் உள்ளிருப்புப் போராட்டங்களாகவே நடத்தப்பட்டன. 100 நாட்களை கடந்து நடத்தப்பட்ட போராட்டம் நெடுவாசலில் ஹைட்ரோ-கார்பன் எடுக்க தமிழக அரசு தடை விதித்ததையடுத்து வெற்றியை அடைந்தது. இப்போராட்டத்தை மாதிரியாகக் கொண்டே தூத்துக்குடி மக்களும் குமரரெட்டியாபுரம் தொடங்கி பல்வேறு கிராமங்களில் உள்ளிருப்பு போராட்டத்தை தொடர்ச்சியாக 99 நாட்கள் நடத்தி வந்தனர். அரசு அப்போராட்டத்திற்கு செவிசாய்க்காத காரணத்தால் 100 வது நாள் ஆட்சியர் அலுவலகத்தை நோக்கி முற்றுகையிட ஊர்வலமாக புறப்பட்டனர்.

### போராட்டமும் வன்முறையும்

மே 22 அன்று மக்கள், ஆட்சியர் அலுவலக முற்றுகைப் போராட்டத்தை நடத்த இருந்ததை அறிந்த மாவட்ட நிர்வாகம், மே 20 அன்று மக்களை பேச்சுவார்த்தைக்கு அழைத்தது. அதன்படி எஸ்.ஏ.வி பள்ளி மைதானத்தில் ஒரு நாள் அடையாள போராட்டத்தை நடத்திக்கொள்ள ஒரு சிலருக்கு அனுமதி அளித்தது. இதன் மூலம் மக்களிடையே பிரிவினையை ஏற்படுத்த முயற்சித்தது மாவட்ட நிர்வாகம். ஆனால் அதனை பெருவாரியான மக்கள் மறுத்து விட்டனர். மாவட்ட நிர்வாகத்தின் இம்முயற்சி தோல்வியடையவே வேதாந்தா நிறுவனம் உச்சநீதிமன்றத்தை அணுகி மே 21 மாலை முதல் மே 23 காலை வரை ஊரடங்கு (144 தடை) உத்தரவை பிறப்பிக்க வைத்தது.

மே22 அன்று சுமார் 50 ஆயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் வி.வி.டி சிக்னலில் இருந்து மாவட்ட ஆட்சியர் அலுவலகம் நோக்கிப் புறப்பட்டனர். வழியில் அவர்களை தடுத்து நிறுத்திய காவல்துறையினர் மக்களை கலைப்பதற்காக கூட்டத்தில் காளைகளை அவிழ்த்து விட்டனர். பின்னர் மக்கள் மீது தடியடி நடத்தி போராட்டத்தை கலைக்க முயன்றனர். காவல்துறை போராட்டத்தை குலைக்க முயற்சித்ததை உணர்ந்த பொதுமக்கள், சாலையோரம் கிடந்த கற்களை கொண்டு தாக்கிக் கொண்டே ஆட்சியர் அலுவலகத்தை நோக்கி முன்னேறினர். சரியாக 12 மணிக்குள் மக்கள், ஆட்சியர் அலுவலகத்தை முற்றுகையிட்டனர். அப்போது அவர்கள் மீது துப்பாக்கிச் சூடு நடத்தியது காவல்துறை. கண்மூடித்தனமாகச் சுடுதல் மற்றும் நபர்களை தேர்வு செய்து சுடுதல் ஆகிய இரண்டு முறைகளிலும் துப்பாக்கிச் சூட்டினை நடத்தியது காவல்துறை. இதற்காக எஸ்.எல்.ஆர் துப்பாக்கியின் மூலம் 30 குண்டுகள், கைத்துப்பாக்கி மூலம் 39 குண்டுகள், 303 ரகத் துப்பாக்கியின் மூலம் 4 சுற்றுகள் மேலும் 0.410 துப்பாக்கியின் மூலம் 12 ஷாட்கள் சுட்டதாக அரசே தெரிவித்துள்ளது. மே 22,23 ல் நடத்தப்பட்ட துப்பாக்கிச் சூட்டில் மொத்தம் 13 பேர் உயிரிழந்தனர், 18 பேர் துப்பாக்கி குண்டுகள் பட்டு படுகாயமடைந்தனர் மேலும் ஆயிரக்கணக்கானோர் தடியடியில் காயமடைந்தனர்.

இப்போராட்டம் சம்பந்தமாக 243 வழக்குகளை பதிவு செய்து மொத்தம் 248 பேரை கைது செய்தது காவல்துறை (சட்ட விரோதமாக வல்லநாடு துப்பாக்கி சுடும் பயிற்சி நிலையத்தில் அடைக்கப்பட்டிருந்த 18 வயதுக்கும் குறைவானவர்கள் இதில் கணக்கு காட்டப்படவில்லை). தென் மாவட்டங்களில் இணையதள சேவையை முடக்கியும் அரசு கேபிள் டிவி மூலம் துப்பாக்கிச் சூடு தொடர்பான செய்திகளை தடைசெய்தும் அரசின் அடக்குமுறை வெளியில் தெரியாமல் மறைக்கப்பட்டது. அப்போது ஆட்சியர் அலுவலக முற்றுகைப் போராட்டத்தில் ஈடுபட்ட மற்றும் ஈடுபடாத அனைத்து ஆண்களும் காவல் துறையால் கைது செய்யப்பட்டு விசாரணை என்ற பெயரில் சித்ரவதை செய்யப்பட்டனர். இதனால் ஆண்கள் அனைவருமே தூத்துக்குடியை விட்டு வெளியேற வேண்டிய சூழல் ஏற்பட்டது. பெண்கள் பாதுகாப்பிற்காக கூட்டாக ஒன்றிணைந்து மாதா கோவில்களில் தங்கித் தங்களை காத்துக் கொண்டனர்.

### எரித்தது யார்?

ஜல்லிக்கட்டுப் போராட்டத்தில், "சமூக விரோதிகள் நுழைந்துவிட்டார்கள் அதனாலேயே தடியடி நடத்தி கூட்டத்தை கலைகின்றோம்" எனக் கூறிக்கொண்டே தமிழக காவல்துறை, வாகனங்களுக்கு தீ வைத்ததை நாம் பார்த்திருப்போம். நெடுவாசல் போராட்டத்தில்," தீவிரவாதிகள் நுழைந்து விட்டார்கள்" எனக் கூறி மாணவி வளர்மதியை கைது செய்ததை நாம் அறிந்திருந்தோம். அதே குரலில்தான் தூத்துக்குடி போராட்டத்திலும் "சமூக விரோதிகள் நுழைந்துவிட்டனர்" எனக்கக்கூறி துப்பாக்கிச் சூட்டினை நடத்தியது தமிழக காவல்துறை. முன்பு இப்படி ஆளும் வர்க்கத்தால் மட்டுமே முன்வைக்கப்பட்ட வாதத்தை தற்போது போராட்டத்தில் ஈடுபட்ட மற்றும் ஈடுபடாத சமூக செயல்பாட்டாளர்களும் இயக்கங்களும் கூட முன்வைக்கின்றன. இப்போராட்டம் நடந்து ஓராண்டு கடந்துவிட்ட நிலையிலும் போராட்டத்தின்போது கல்லெறிந்தவர்கள் யார்? தீ வைத்தது யார்? என்ற கேள்விக்கு நம்மில் பலருக்கும் விடைதெரியாது. சமூக




விரோதிகள் போராட்டத்தில் ஊடுருவியதாகவும் அவர்கள்தான் ஆட்சியர் அலுவலகத்தில் இருந்த கேமராக்களை உடைத்து, வாகனங்களுக்கு தீ வைத்ததாகவும் பெரும்பாலான சமூகச் செயல்பாட்டாளர்கள் மற்றும் போராட்ட இயக்கங்கள் பிரச்சாரம் செய்கின்றன. ஆனால் உண்மையில் நடந்தது என்ன?

மக்கள் குடும்பம் குடும்பமாக உணவு பொட்டலங்களை எடுத்துக்கொண்டே போராட்டத்திற்கு வந்திருந்தனர். குழந்தைகள் முதல் முதியவர்கள் வரை என அனைத்து ஆண்களும் பெண்களும் இப்போராட்டத்தில் கலந்துகொண்டனர். மக்கள் எவ்விதமான கலவரம் செய்யும் நோக்கத்தோடும் போராட்டத்துக்கு வரவில்லை. ஆனால் 'மக்கள் எந்தவிதமான கலவரம் செய்யும் நோக்கத்தோடும் போராட்டத்துக்கு வரவில்லை என்பது எந்த அளவிற்கு உண்மையோ அதே அளவிற்கு அவர்கள் போராட்டத்தில் இருந்து எக்காரணத்தைக் கொண்டும் பின்வாங்கும் முடிவோடும் வரவில்லை' என்பதும் உண்மையாகும்.

மக்கள் ஆட்சியர் அலுவலகத்தை முற்றுகையிடுவது என்ற முடிவோடு மட்டுமே வந்திருந்தனர். ஆனால் அதைத் தடுக்கும் விதமாக காவல்துறை காளைகளை அவிழ்த்துவிட்டது, கண்ணீர் புகைக்குண்டுகளை வீசியது, தடியடி நடத்தியது. அதுவரை பொறுமை காத்த மக்கள் ஆட்சியர் அலுவலகத்தை நோக்கி முன்னேறுவதற்காக காவலர்களை நோக்கி கற்களை வீசத் தொடங்கினர். இதுநாள் வரை அப்பாவி மக்களை அடித்தே பழக்கப்பட்ட காவல்துறை அன்று மக்களிடம் அடிவாங்கி தலை தெறிக்க ஓடியது. போராட்டத்தை காவல்துறை வன்முறை பாதைக்கு கொண்டு சென்றுவிட்டதை உணர்ந்த மக்கள் தங்களை பதிவு செய்த சாலை ஓரம் இருந்த கண்காணிப்புக் கேமராக்களையும் அடித்து நொறுக்கினர். இதனை ஆட்சியர் அலுவலகம் வரைத் தொடர்ந்தனர். இவர்களைத்தான் சமூக விரோதிகள் என்கின்றனர் இச்சமூகத்தின் (ஆகச்சிறந்த) சமூகச் செயல் பாட்டாளர்கள். 'தன்னுடைய முகம் கேமராவில் பதிவாகினாலும் பரவயில்லை. தனக்கு பின்னால் வருபவர்களின் முகம் பதிவாகக்கூடாது, அப்படி பதிவானால் காவல்துறையால் கடும் சித்ரவதைக்கு உள்ளாக்கப்படுவோம்' என்ற எண்ணத்துடன் கேமராவை உடைத்தவர்கள் தான் சமூக விரோதிகளா?

மக்கள் கற்களை கொண்டு தாக்கியதால் மட்டுமே காவல்துறை பின்வாங்கியது. அதனாலேயே ஆட்சியர் அலுவலகம் வரை மக்களால் முன்னேற முடிந்தது. அதனை செய்யவில்லை என்றால் மக்கள் ஆட்சியர்

அலுவலகத்தை அடையும் முன்பே காவல்துறை நடத்திய தடியடியில் கலைக்கப்பட்டிருப்பர். மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் இருக்கும் ஆட்சியர் வெங்கடேஷை முற்றுகையிட்டு ஸ்டெர்லைட் தொழிற்சாலையை மூடுவதற்கான ஆணையை பிறப்பிக்க வைப்பதே மக்களின் நோக்கமாக இருந்தது (மாவட்ட ஆட்சியர் அன்று கோவில்பட்டி ஜமாபந்திக்கு சென்று இருந்தது மக்களுக்கு தெரிந்திருக்கவில்லை). ஆனால் போராட்டத்தை ஒடுக்குவதற்காக ஆட்சியர் அலுவலகத்தில் முகாமிட்டிருந்த காவல்துறை உயரதிகாரிகள் மக்களால் முற்றுகையிடப்பட்டனர். தாங்கள் முற்றுகையிடப்பட்டதை சற்றும் எதிர்பாராத காவல்துறை துப்பாக்கிச் சூடு நடத்தி புலம் பெயர்ந்த ஈழத்தமிழரான கந்தையாவைக் கொன்று மக்களை பின்வாங்க செய்தது. அந்த இடைவெளியை பயன்படுத்தி ஆட்சியர் அலுவலுவலகத்தில் இருந்த உயரதிகாரிகளை பாதுகாப்பான இடத்திற்கு அனுப்பி வைத்தது. அப்படி தப்பிச் சென்ற உயரதிகாரிகள் பாதுகாப்பான இடங்களில் அமர்ந்துகொண்டுமக்களை திட்டம் தீட்டி படுகொலை செய்தனர்.

ஆட்சியர் அலுவலகத்தில் கந்தையா சுட்டுக்கொல்லப்பட்டதையும் வாகனங்கள் வெளியே செல்வதையும் கண்ட மக்கள், 'போராட்டக்காரர் ஒருவர் சுட்டுக் கொல்லப்பட்ட கோபத்திலும் ஆட்சியர் தப்பித்துவிட்டார் (ஆனால் தப்பிச்சென்றது ஆட்சியர் அல்ல, டி.ஐ.ஜி. கபில் குமார் சரத்கார்) என்ற விரக்தியிலும் அங்கு நின்றிருந்த வாகனங்களுக்கு தீ வைத்தனர்.

### வெற்றியா? தோல்வியா?

தூத்துக்குடி போராட்டம் வெற்றியா தோல்வியா என்ற குழப்பமும் நம்மில் பலரிடம் உள்ளது. முதலில் இப்போராட்டம் ஸ்டெர்லைட் ஆலையின் விரிவாக்கமான இரண்டாவது உருக்காலையை அமைப்பதற்கு எதிராகத்தான் தொடங்கப்பட்டது. மே 22,23 ம் நாளில் நடத்தப்பட்டத் துப்பாக்கிச்சூட்டை அடுத்து தமிழகமே ஸ்டெர்லைட் ஆலையை எதிர்த்ததால் இவ்வாலையின் விரிவாக்கத்தை தமிழக அரசு தடை செய்தது. மேலும் ஸ்டெர்லைட் ஆலையை தற்காலிகமாக மூடவும் உத்தரவிட்டது. அந்த அளவில் பார்க்கப் போனால் தூத்துக்குடி மக்களால் நடத்தப்பட்ட இப்போராட்டம் மிகப்பெரிய வெற்றியை அடைந்த போராட்டமாகும்.

மக்கள் திருப்பி தாக்கியதாலேயே இப்போராட்டம் இந்த அளவிற்க்கான வெற்றியை அடைந்தது. இனி தமிழ்நாட்டு மக்களுக்கு சற்றும் தொடர்பில்லாத சிங்கூர், நந்திகிராம், நியாம்கிரி, போஸ்கோ போராட்டங்களை கூறிக்கொண்டிருக்க வேண்டியதில்லை. தூத்துக்குடி மக்களின் வீரம் செறிந்த போராட்டங்களையும் அதன் படிப்பினைகளையும் கற்பித்தலே சிறப்பானதாக அமையும். அதே சமயத்தில் இவ்வாலை இதுவரை நிரந்தரமாக மூடப்படவில்லை என்பதையும் நாம் உணர்ந்துகொள்ள வேண்டும்.

இதுவரை நரவேட்டைக்களை நடத்திய அரசு தற்போது நய வஞ்சக வேட்டைகளை நடத்தி ஸ்டெர்லைட் ஆலையை திறப்பதற்கு ஆதரவைத் தேடி வருகிறது. விரைவில் இவ்வாலை திறக்கப்படலாம். ஆனால் அப்போதும் மக்கள் போராடுவார்கள். ஸ்டெர்லைட் ஆலைக்கு எதிரான தூத்துக்குடி மக்களின் இப்போராட்டம் 2018ல் தொடங்கப்பட்டதும் அல்ல 2018 டோடு முடியப்போவதும் அல்ல. தூத்துக்குடியிலிருந்து ஸ்டெர்லைட் தொழிற்சாலை அகற்றப்படும் வரை இப்போராட்டம் தொடரும்.

### மக்கள் மகத்தானவர்கள்

1928ல் சௌரி சௌரா காவல் நிலைய எரிப்பு சம்பவத்திற்கு பிறகு வெள்ளையருக்கு எதிரான ஒத்துழையாமை இயக்கத்தை காந்தி கைவிட்டார். அதேபோல் இப்போது தூத்துக்குடி படுகொலைக்கு பின்னர் பெரும்பாலான புரட்சிகர இயக்கங்களும் போராடுவதை கைவிட்டுவிட்டனர். இவர்கள் புரட்சிகரத் தோழர்களா? அல்லது காந்திய வாதிகளா? இவர்கள், தூத்துக்குடி மக்கள் வீரத்தாலும் தியாகத்தாலும் பெற்ற வெற்றியை வெளியில் கொண்டு பொய் சேர்ப்பதை காட்டிலும் அவர்களின் சோகத்தை மட்டுமே வெளிக்காட்டுகின்றனர். இதன் மூலம் மற்ற மக்களும் அவர்களின் பிரச்சினைகளுக்கு எதிராக ஒன்றிணைந்துப் போராடுவதை உளவியல் ரீதியாக தடுத்து வருகின்றனர்.

ஆனால் உழைப்பை மட்டுமே வாழ்வாதாரமாக கொண்ட மக்கள், அவ்வுழைப்பின் ஆதாரமான உடல் நலத்திற்கு தீங்கு விளைவிக்கும் தொழிற்சாலையை மூடக்கோரி போராடினர். அப்போராட்டத்தில், காவல்துறை வன்முறையை தொடங்கியதனால் மக்களும் திருப்பி தாக்கினர். அவர்களை பெயரளவிலான புரட்சியாளர்களும் சமூக செயல்பாட்டாளர்களும் பிற்போக்குத்தனமான இயக்கங்களும் "வன்முறையாளர்கள், சமூக விரோதிகள், வேதாந்தவின் கூலிப்படையினர்" என்று கொச்சைப்படுத்துகின்றனர். இதன் மூலம் இவர்கள், 'தங்கள் மீது ஆளும் வர்க்கங்களால் நடத்தப்படும் வன்முறைகளை கோழைத்தனமாக சகித்துக் கொள்வதைப் போலவே மக்களும் சகித்துக்கொள்ள வேண்டும்' என்று எதிர்பார்க்கின்றனர். உண்மையில் இவர்கள் சூடு சொரணையற்றவர்கள் எவ்வளவு அடித்தாலும் வாங்கிக்கொள்ளும் அளவிற்கு நல்லவர்கள். அனால் மக்கள் அப்படிப்பட்டவர்கள் அல்ல. மக்கள், அடித்தால் திருப்பி அடிக்கும் குணத்தை கொண்டவர்கள். அதனால்தான் மக்கள் மகத்தானவர்கள்.

-தோழர் பூ.சிவக்குமார்



# திராவிட மாயை

தமிழர்கள், தம்மை தமிழ்த் தேசிய இனத்தவர் என்பதை உணர்ந்து அதற்காக போராட வேண்டியதன் அவசியத்தை உணர்ந்து கொள்ள விடாது தடுத்து வைத்திருப்பது 'திராவிட மாயை' கருத்தாகும். அதாவது தமிழர்கள், தாம் 'தமிழ் இனத்தவரா' அல்லது 'திராவிட இனத்தவரா' என்று குழப்ப நிலையில் வைத்திருப்பது 'திராவிட மாயை' கருத்தாகும்.

தமிழ்நாட்டில் மத்திய அரசின் முட்டுத்தாங்கி கட்சிகளாக திராவிட கட்சிகள் இருந்துகொண்டு - முக்கியமாக தி.மு.க.வும் அ.தி.மு.க.வும் இருந்துகொண்டு -தமிழினத்திற்கு துரோகம் இழைத்து வருகின்றனர் என்பது யாவரும் அறிந்ததே. அதற்காக அவ்விரு கட்சிகளின் தலைவர்களின் தமிழினத் துரோகச் செயல்களை தமிழ்த் தேசிய உணர்வாளர்கள் விமர்சித்தும் வருகின்றனர். ஆனால் இவ்விரு கட்சிகளின் தலைவர்களை மட்டும் விமர்சித்தால் போதாது, அவர்களின் துரோகச் செயல்களுக்கான கொள்கையாக இருப்பது 'திராவிட மாயை' கருத்தாகும், 'திராவிட மாயை' கருத்தை உடைத்தெரிந்தால் தான், தமிழர்கள் தம்மை தமிழ்த் தேசிய இனம் என்று உணர்ந்து போராடுவார்கள், அப்போது அவ்விரு தலைவர்களின் தமிழினத் துரோகச் செயல்களில் வெளிப்படும். வெளிச்சத்திற்கு வரும்.

### திராவிட மாயை என சொல்வது ஏன்?

'மாயை' என்றால் இல்லாத ஒன்று இருப்பது போல் கற்பனை செய்யப்பட்ட கருத்தாக்கமாகும். 'திராவிடர்' என்றொரு இனம் உலகில் இல்லவே இல்லை. திராவிடர் என்றொரு இனம் இருந்து, அது செயல்பட்டு வந்ததற்கான வரலாறு எதுவுமே கிடையாது. 18ஆம் நூற்றாண்டிற்கு முன்பு வரை - கால்டுவெல், ஒரு மொழிக் குடும்பத்திற்கு திராவிட மொழிக் குடும்பம் எனப் பெயரிடும் காலம் வரை - திராவிட இனம் பற்றிய கருத்தே கிடையாது. சிறு குறிப்பு கூட கிடையாது. திராவிடர் என்ற இனம் இருந்திருந்தால் தானே இருக்கும்.

ஐரோப்பியர்கள் இந்திய துணைக்கண்டத்தை ஆக்கிரமித்துக் கொண்டு விட்ட பிறகு, ஐரோப்பிய மொழி நூல் அறிஞர்கள் சிலர் இந்திய துணைக்கண்டத்தில் இருக்கும் மொழிகளைப் பற்றி ஆய்வு செய்கின்றனர். முதலில் அவர்களெல்லாம் இந்தியத் துணைக் கண்டத்தில் உள்ள மொழிகள் யாவும் ஒரே மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள் என்றே கருதினர். அதிலும் சமஸ்கிருத மொழிக் குடும்பம் என்றே கருதினர். பிறகு வந்த மொழிநூல் அறிஞர்களோ நான்கிற்கு மேற்பட்ட மொழிக் குடும்பங்கள் இங்கு இருப்பதாக கண்டனர். அந்த வகையில் தமிழ் மொழியை ஆய்வு செய்த கால்டுவெல் எனும் மொழிநூல் அறிஞர் தமிழ் மொழியுடன் ஒத்த

மொழிகள் சில இருப்பதைக் கண்டார். அந்த மொழிகளை எல்லாம் ஒரே மொழிக் குடும்பம் என்றார்.

தமிழ் மொழியுடன் ஒத்த மொழிகளை ஒரு மொழிக் குடும்பம் என்ற கால்டுவெல், தமிழ் மொழியே சமஸ்கிருத மொழியிலிருந்தே தோன்றியதாகவே கருதினார். தமிழ் மொழியோடு ஒத்த மொழிகளையெல்லாம் ஒரு மொழிக் குடும்பம் என்ற கால்டுவெல், அந்த மொழிக் குடும்பத்திற்கு ஒரு பெயரை கொடுக்க விரும்பினார். பெயருக்காக தேடியலைந்தார். அவ்வகையில் சில சமஸ்கிருத இலக்கியங்களில் தமிழர்களைக் குறிக்க திராவிடி என்ற சொல் பயன்பட்டு வந்துள்ளதை கண்டார். அந்த சொல்லையே தான் கண்ட மொழிக் குடும்பத்திற்கும் சூட்டிவிட்டார். "திராவிட மொழிக் குடும்பம்" என்றார் கால்டுவெல். ஆனால் திராவிடர் என்றொரு இனம் இருந்ததாக கால்டுவெல் கூறவில்லை. திராவிடர் என்ற சொல்லைப் பயன்படுத்திய சமஸ்கிருத இலக்கியங்களும் தமிழர்களைக் குறிக்க அச்சொல்லைப் பயன்படுத்தி உள்ளனவே தவிர 'திராவிடர்' என்றொரு இனம் இருந்ததாக கூறவில்லை.

தமிழ் நாட்டின் வடக்கு எல்லையில் ஒரு காலத்தில் திரையர்கள் என்கிற வம்சத்தவர்கள் ஆண்டுவந்தனர். சோழர்கள், பாண்டியர்கள் என்பது போல திரையர்கள் என்பதும் ஒரு அரச வம்சமாகும். தமிழ்நாட்டின் வட எல்லையில் திரையர்கள் இருந்ததால் தமிழ்நாட்டிற்கு வடக்கே உள்ளவர்கள் வடக்கே இருந்து வரும்போது முதலில் காணும் தமிழர்களாய் திரையர்கள் இருந்ததால், தமிழர்களை திரையர் என்றே கூறினர். திரையர் என்ற சொல் வடமொழியில் 'திராவிடி' எனப்பட்டது. 'திராவிடி' எனும் சொல் மீண்டும் தமிழுக்கு வந்து சேர்ந்தபோது 'திராவிட' என்ற சொல் ஆகியது. மற்றபடி 'திராவிட' சொல் ஒரு மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள் பேசுவோர் எல்லாம் 'திராவிடர் இனம்' என்ற பொருளில் வரவில்லை. கால்டுவெல்லுக்கு பிறகு,-கால்டுவெல் திராவிட மொழிக் குடும்பம் என அறிவித்தற்கும் பிறகு -சிலர் அந்த மொழி குடும்பத்தைச் சேர்ந்தோர் எல்லாம் ஒரே இனம் -திராவிட இனம் -என கற்பனை செய்து கூறிவிட்டனர். 18ஆம் நூற்றாண்டிற்கு முன்பு வரை திராவிடர் என்றொரு இனம் வரலாற்றில் இந்த பாத்திரத்தை வகித்தது என்கிற எவ்வித செய்தியும் கிடையாது.

பொதுவாக, ஒரு இனத்தவர் பழமொழிகளையும் பேசலாம், ஒரே மொழியை பல இனத்தவர்களும் பேசலாம். மொழியை மட்டும் அடிப்படையாகக் கொண்டு இனத்தை காண்பது சரியானதாக இருக்காது. அவ்வகையில் தமிழோடு ஒத்த மொழிகளைப் பேசுவோர் எல்லாம் ஒரே இனம் என்று கூறுவதும் சரியானதன்று. திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளை பேசும் மக்கள் உடற்கூறு இயல் ரீதியாக பல்வேறு இனங்களை சார்ந்தவர்களாக உள்ளனர்.

திராவிட மொழிக் குடும்பம் என்று மொழியியல் கருத்து தோன்றியதை தொடர்ந்து 'திராவிட இனம்' என்கிற கற்பிதமான கருத்து தோன்றிவிட்டது.

வேதங்களிலும், சாத்திரங்களிலும் ஆரிய இனம் பற்றிய கருத்துக்கள் உள்ளன. ஆனால் உடற்கூறு இயல் ரீதியாக ஆரிய இனம் என்று ஒன்றில்லை. வேதங்களில் கூறப்படும் ஆரிய இனம் இந்தியத் துணைக் கண்டத்திற்கு வெளியில் இருந்துதான் வந்திருக்க கூடும் என்கிற கருத்து நிலவுகிறது. அவ்வாறு வந்த ஆரிய இனம், அதற்கு முன் இந்திய துணை கண்டத்தில் வாழ்ந்து வந்த இன மக்களுடன் கலந்து விட்டனர். இரத்தக் கலப்பில்லாத ஆரியர்- ஆரிய இனம்- இன்றில்லை. ஆனால், சமஸ்கிருத மொழி, ஆரிய மொழியாகும், அம்மொழி பேசுவோர் ஆரியராக கருதப்படுகின்றனர். அதிலும் முக்கியமாக ஆரிய மொழி பேசும் பார்ப்பன சாதியினர் ஆரிய இனத்தவராகக் கருதப்படுகின்றனர். அந்த சாதியினர் ஆரிய மொழி பேசினாலும் பல்வேறு இன இரத்தக் கலப்பு உடையவர்களாகவே உள்ளனர். அதனால் ஒரு சாதி மட்டுமே ஒரு இனமாகாது. மேலும் ஆரிய மொழி மக்களின் வாழ்வியல் மொழியாக இருக்கவில்லை. வாழ்வியல் மொழியாக இல்லாத ஒரு மொழியை பேசுவோரை ஒரு இனத்தவராகக் கருதுவது சரியன்று. சுமார் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஆரிய இனம், ஆரிய இனமாக இருந்திருக்கும்.

ஆரிய இனம் என்றொரு இனம் இன்றைக்கு இல்லை என்றாலும் ஆரிய இனம் இருந்ததற்கான ஆதாரங்கள் உள்ளன. ஆனால் அப்படி திராவிட இனம் இருந்ததற்கான ஆதாரங்கள் எதுவும் இல்லையே!

ஆரியர்கள் வேறு இன மக்களோடு போரிட்டதாக வேதங்கள் கூறுகின்றன. அந்த மக்கள் யார் என தெரியவில்லை. ஆரியர்கள் வருகைக்கு முன் வட இந்தியாவில் வாழ்ந்த மக்களில் ஏதேனும் ஒரு இனத்தவராக இருக்கக்கூடும். ஆனால் திராவிட இனக் கருத்தாளர்களோ ஆரியர்கள் போரிட்டது திராவிடர்களுடனே தான் என கற்பிதமாக கூறிவிட்டனர். அதுமுதல் ஆரியர்-திராவிடர் இனப்பகை கருத்து வளர்ந்து விட்டது. ஆரியர்கள் தஸ்யூக்களுடன் போரிட்டதாக வேதங்கள் கூறுகின்றனவே தவிர திராவிடர்களுடன் போரிட்டதாக கூறவில்லை.

அடுத்து புதைபொருளாய்வாளர்கள் சிந்து சமவெளி நாகரிகத்தை கண்டறிகின்றனர். அதனை ஆரிய நாகரீகம் என்று பலர் கூறினர். சிலரோ அது ஆரிய நாகரீகமாக இருக்க முடியாது, ஆரியர் வருகைக்கு முன்பு அங்கு வாழ்ந்த மக்கள் நாகரிகமாக இருக்கக்கூடும் என்றனர். உடனே திராவிட இனக்

கற்பிதக் கொள்கையாளர்கள் அது திராவிட நாகரிகம் என உரிமை கொண்டாடத் தொடங்கி விட்டனர்.

அவ்வாறாக திராவிட இன கற்பிதக் கொள்கை மேலும்மேலும் வலுப் பெறத் தொடங்கிவிட்டது. இந்தச் சூழலில் வட இந்திய தரகு முதலாளிகளுக்கும், தென்னிந்தியத் தரகு முதலாளிகளுக்கும் ஆங்கிலேய முதலாளிகளுடன் கூட்டுச் சேர்வதில் போட்டி ஏற்படுகிறது. அப்போட்டியானது ஆரியர், திராவிடர் இனப்பகை கருத்தை வலுவடையச் செய்கிறது. மேலும் தென்னிந்திய தரகு முதலாளிகளுக்குகான நீதிக்கட்சியும், சுயமரியாதை இயக்கமும் சேர்ந்து திராவிடர் கழகம் ஆகிறது. அது முதல் சாதாரணமாக இருந்த திராவிட இனவாத கருத்து அரசியல் கருத்தாக மாறி, தமிழர்களை ஆட்டிப்படைக்க தொடங்கிவிட்டது.

இந்த, திராவிட இனவாத கற்பனா கருத்தில் மிகப்பெரிய அபாயம் ஒன்று மறைந்துள்ளது. அதைத்தான் முக்கியமாக புரிந்து கொள்ள வேண்டும். அதாவது ஏதோ ஆரியர்-திராவிடர் பகை தீர்க்க முடியாத பகை என்பது போன்ற தோற்றத்தை அக்கருத்து தந்தாலும், உள்ளடக்கத்திலோ ஆரியர்களுக்கு முன்பே இந்தியா முழுமையும் வாழ்ந்தவர்கள் திராவிடர்கள், வட இந்தியாவில் உள்ள சிந்து சமவெளி நாகரிகம் திராவிடர்களுடையதுதான், அந்த வகையில் இந்தியாவே தமிழர்களுடையதுதான், பின் எதற்காக தமிழர்கள் தமிழ்நாடு கேட்க வேண்டும் என்கிற கருத்து ஒளிந்து கொண்டு தமிழர்களை போராட விடாமல் தடுக்கிறது.

கண்ணுக்குப் புலப்படும் எதிரியை எதிர்கொள்வது கடினம் அல்ல. ஆனால் கண்களுக்குப் புலப்படாத எதிரியை எதிர்கொள்வதே கடினம். அந்த வகையில் தமிழ்த் தேசியத்திற்கு எதிர் இந்திய தேசியம் என்பது யாவரும் அறிந்த ஒன்று தான் ஆனால் தமிழ்த் தேசியத்திற்கு எதிராக திராவிட தேசியம் உள்ளது என்பதை புரிந்து கொள்ள முடியவில்லை தமிழக மக்களால். அதனால் மிகக் கடினமாக எதிர்க்கப்பட வேண்டிய எதிரியாக திராவிட தேசியம் உள்ளது. திராவிட தேசியத்திற்கு அடிப்படையான திராவிட மாயை கருத்து உடைத்தெறியப்பட வேண்டும்.

எந்த தென் இந்திய தரகு முதலாளி வர்க்கத்தின் நலனுக்காக திராவிட மாயை கருத்து கற்பிக்கப் பட்டதோ, அந்தக் கருத்தில் தமிழக மக்களை மூழ்கடித்துவிட்டு, அந்த தென்னிந்திய தரகு முதலாளி வர்க்கமோ, வட இந்தியத் தரகு முதலாளி வர்க்கத்துடன் கள்ளக் கூட்டு சேர்ந்து கொண்டு, தமிழர்களை அம்போவென்று விட்டு விட்டது. அவர்கள் மாறிக்கொண்டார்கள், மக்களின் கருத்து தான் மாறவில்லை, மாற்ற வேண்டும்!

## தமிழ் இன சிதைவிற்கு காரணமான ஆரிய இனம்

திராவிட இனம் என்றொரு இனம் இல்லை என்றும் திராவிட இனத்திற்கும் ஆரிய இனத்திற்கும் போர் நடைபெற்றதாக கூறுவது கற்பனை கதை என்றும் நாம் கூறினாலும் ஆரிய இனத்தால் தமிழினத்திற்கு எவ்வித பாதிப்பும் இல்லை என்று கூறவில்லை. ஆரிய இனத்தால் தமிழினம் சிதைந்துள்ளது. தமிழ்மொழி சிதைந்துள்ளது. ஆரிய கலாச்சாரத்தால் தமிழர் கலாச்சாரம் சிதைவடைந்துள்ளது. அதற்கு ஆரியர் மட்டிலுமே காரணம் அல்ல, ஆரிய இனத்தவரை உச்சிமேல் வைத்து கொண்டாடிய தமிழ் ஆளும் வர்க்கத்தினரே!

தமிழகத்தில் சுமார் முவாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஆண்டான் அடிமை சமுதாய முறை தோன்றிவிட்டது. தொடக்க காலத்தில் ஆண்டான் அடிமைச் சமூக அமைப்பு நிலவிய இடங்களில் இருவித அரசமைப்புகள் இருந்துள்ளன. ஒன்று குறுநிலத் தலைவர்களின் அரசுகள், மற்றொன்று இனக் குழுத் தலைவர்களின் அரசுகள். வர்க்கப் பிரிவினை சமூகம் இருந்த இடங்களில் குறுநிலத் தலைவர்களின் அரசுகளும் வர்க்கப் பிரிவினை தோன்றாத இடங்களில் இனக் குழுத் தலைவர்களின் அரசுகள் இருந்துள்ளன. அவ்வாறான அரசுகள் தமிழகத்தில் நூற்றுக்கணக்கில் இருந்திருக்கக்கூடும்.

ஆண்டான் அடிமை உற்பத்திமுறை வளர்ச்சி அடையஅடைய சிற்றரசர்களாக இருந்தவற்றில் ஒருசில, பேரரசுகளாக வளரத் தொடங்கின. அந்த வகையில் சேர சோழ பாண்டியர் பல குறுநில தலைவர்களையும், இனக்குழு தலைவர்களையும் வென்று அந்நாடுகளை இணைத்து பெரிய நாடுகளை உருவாக்கினர். அந்த பேரரசர்கள் தங்களை குறுநில தலைவர்களில் இருந்து வேறுபடுத்திக் காட்டிக் கொள்ள கொள்வதற்காகவும் மற்றவர்கள் தங்களுக்கு கீழ்ப்படிந்து தங்களை பேரரசர்களாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்காகவும், வட நாட்டில் வழங்கி வந்த கலாச்சாரத்தை தமிழ்நாட்டிலும் புகுத்த எண்ணினர். முக்கியமாக வடநாடுகளில் மன்னர்களுக்கு முடிசூட்டுவது பிராமணர்களாவர். அம்முறையை தமிழகத்திலும் ஏற்படுத்த விரும்பினர்.

அந்த வகையில் முதலாவதாக சோழர்கள் கைலாயத்திலிருந்து அந்தணர்களை (தில்லை தீட்சிதர்கள்) அழைத்து வந்து தில்லையில் வைத்து முடிசூட்டிக் கொண்டனர். தொடர்ந்து சேரர்களும், பாண்டியர்களும் வடநாட்டு ஆரிய பார்ப்பனர்களை தமிழகத்துக்கு அழைத்து வந்து முடிசூட்டிக் கொண்டனர். ஆரிய பிராமணர்களைக் கொண்டு முடிசூட்டிக் கொண்டதால் தாங்கள் மட்டுமே மணிமுடி வைத்துக் கொள்ள தகுதி உடைய முடியையுடை மூவேந்தர் ஆயினர். அவ்வகையில்

ஏனைய குறுநில மன்னர்கள் தங்களுக்கு அடிபணிந்து நடக்க வேண்டும் என்றனர். முடியுடைய மூவேந்தர்களைத் தொடர்ந்து ஆண்டை வகுப்பினர் முக்கியமாக வேளால வகுப்பினரும், வணிக வகுப்பினரும் ஆரிய பார்ப்பனர்களை அழைத்து வந்து அவர்களை முன்வைத்து திருமணச் சட்டங்கள் ஏற்படும் கரும காரியங்களையும் செய்து கொண்டனர். ஆரிய பார்ப்பனர்களால் செய்து வைக்கப்படும் திருமணங்களே செல்லத்தக்கவை என்கிற எண்ணம் தமிழரிடையே பரவத் தொடங்கியதும், தமிழ்நாட்டில் புரோகிதர் தொழிலுக்கு நல்ல கிராக்கி இருப்பதைக் கண்ட வட நாட்டு ஆரிய பிராமணர்கள் மேலும்மேலும் வந்து இங்கேயே குடியேறிவிட்டனர்.

தமிழகத்திலிருந்த அடிமை வர்க்கத்தினரை ஆண்டை வர்க்கத்தினர் சுரண்டுவதையும், அடக்கி ஒடுக்குவதையும் கருத்தியலாக நியாயப்படுதிக்கொள்ள ஆண்டை வர்க்கத்தினருக்கும் -வகுப்பினருக்கும் ஆரிய பிராமணர்கள் தேவைப்பட்டனடர். அந்த வகையில் ஆரிய பிராமணர்கள் தமிழகத்திற்குள் படையெடுத்து வரவில்லை பகை கொண்டும் வரவில்லை, ஆண்டை வர்க்க தமிழர்களாலேயே வரவழைக்கப்பட்டனர். ஆண்டை வர்க்க ஆளும் வர்க்க தமிழர்களின் தயவிலேயே ஆரிய பிராமணர்கள் வாழ்ந்து வந்தனர் (அன்று முதல் இன்றுவரை அதே நிலைதான்).

கி.பி. இரண்டாம் நூற்றாண்டளவில், ஆண்டான் அடிமைச் சமூக அமைப்பை ஒழிக்கும் மிகப்பெரிய வர்க்கப் புரட்சி -களப்பாளர் புரட்சி- தமிழகத்தில் நடந்தது. அப்புரட்சியானது சோழ நாட்டிலும், பாண்டிய நாட்டிலும் திரையர் நாட்டிலும் நடந்தது. சேர நாட்டில் அப்புரட்சி நடைபெறவில்லை. இன்றுள்ள தமிழக எல்லைக்குள் மட்டுமே நடந்தது. சேர நாட்டில் ஏன் நடைபெறவில்லையென்றால், சேர மன்னர்களும் சேரநாட்டு தமிழ் ஆண்டை வர்க்கத்தினரும் அங்குள்ள மக்கள் புரட்சியை நடத்தா வண்ணம் தடுத்துவிட்டனர். மேலும் அதற்காக ஆரியப் பிராமணர்களின் தயவை நாடி விட்டனர். ஆரிய பிராமணர்களோ வர்க்கப் புரட்சி நடைபெறாவண்ணம் கலாச்சார ரீதியான தாக்குதலைத் தொடுத்தனர். அவையாவது தமிழ் மொழியுடன் ஆரிய மொழியை கலந்து மலையாளம் வேறுமொழியாக்கியும், சேர நாட்டில் இருந்த மருமக்கள் தாய முறையை பயன்படுத்திக் கொண்டு தமிழர்களோடு ஆரிய பிராமணர்கள் கலப்பு மணம் புரிந்துகொண்டு சேர நாட்டுத் தமிழர்களை மலையாளிகள் எனும் தனி இனமாக்கியும், இன்னும் பல்வேறு விதமாக தமிழர்களின் கலாச்சாரத்தோடு ஆரியக் கலாச்சாரத்தை கலந்து, சேர நாட்டுத் தமிழர்களை தமிழினத்திலிருந்து சிதைத்து பிரித்து விட்டனர்.

சேர நாட்டில் ஒரு வர்க்கப் புரட்சி நடந்து விடக்கூடாது என்பதற்காக சேர நாட்டை ஆண்ட தமிழ் ஆளும் வர்க்கத்திற்காக அரசியலில் மதவாதிகளாய் ஆரிய பிராமணர்கள் தலையிட்டு சேர நாட்டுத் தமிழர்களை மலையாளிகள் எனும் தனி இனமாக பிரிந்துவிட்டனர். தமிழரிலிருந்து மலையாளிகள் இனம் பிரிந்தது, தமிழினத்திற்கு மிகப் பெரும் பாதிப்பாகும். அது தமிழினத்தின் மீது ஆரிய இனத்தால் நடத்தப்பட்ட சிதைவு ஆகும். இன்றுள்ள தமிழ்நாட்டில் களப்பாளர் புரட்சி மட்டும் நடந்திருக்காவிட்டால் இந்த தமிழர்களும் பல்வேறு சிதைவுக்கு உள்ளாகி இருக்கக்கூடும். களப்பாளர் வர்க்க புரட்சியானது ஆரிய பார்ப்பனர்களின் உடைமைகளை பறித்தும், அவர்களை சமூக அந்தஸ்தை பறித்தும் அவர்களை அடக்கி வைத்திருந்தது.

கிபி ஐந்தாம் நூற்றாண்டளவில் வட தமிழ்நாட்டில் பல்லவர்கள் கிளம்பி களப்பாளர் ஆட்சியை அழித்துவிட்டனர். தென் தமிழ்நாட்டில் பாண்டியர்கள் மீண்டும் வந்து களப்பாளர் ஆட்சியை ஒழித்து விட்டனர். மத்திய தமிழ்நாட்டில் சோழர்கள் மீண்டும் வந்து களப்பாளர் ஆட்சியை ஒழித்து விட்டனர். பல்லவர்கள், பாண்டியர்கள், சோழர்கள் ஆட்சிகள் நிலப்பிரபுத்துவ வர்க்கத்தை ஆளும் வர்க்கமாக்கியது. தமிழ்நாட்டின் நிலப்பிரபுத்துவ சமுதாய முறை நிலைபெறவும், நிலப்பிரபுத்துவ வர்க்கம் -ஆளும் வர்க்கம்- மீண்டும் பார்ப்பனர்களின் சமூக அந்தஸ்தை உயர்த்தியது. களப்பாளர்களால் பறிமுதல் செய்யப்பட்ட பார்ப்பனர்களின் உடைமைகளை எல்லாம் மீண்டும் பார்ப்பனர்களுக்கே வழங்கியது. நிலப்பிரபுத்துவ வர்க்கத்தாரும் வணிக வகுப்பாரும் பார்ப்பனியத்தை தங்கள் வர்க்க நலனுக்காக உயர்த்தி விட்டனர்.

தமிழ்த் தேசியப் புரட்சி நடக்க வேண்டிய இன்றையச் சூழலில் தமிழ்நாட்டு நிலப்பிரபுத்துவ வர்க்கமும் தமிழ்நாட்டு தரகு முதலாளிய வர்க்கமும் ஆளும் இந்திய தரகு முதலாளி வர்க்கத்துடன் சேர்ந்து கொண்டு தமிழகத்தில் தமிழ்த் தேசியப் புரட்சி நடைபெற விடாமல் தடுத்துக் கொண்டிருக்கும் எதிர்ப்புரட்சி வர்க்கங்களாய் இருந்து கொண்டிருக்கின்றனர். அவர்களுக்கு துணையாய் (தமிழ்) திராவிட தரகு முதலாளி வர்க்கமும் எதிர்ப்புரட்சி வர்க்கமாக உள்ளது. இந்த எதிர்ப்புரட்சி வர்க்கங்கள் தங்களுக்கு சாதகமாக பார்ப்பனியத்தை பயன்படுத்துகின்றன. பார்ப்பனியமும் தமிழ்த் தேசியப் புரட்சிக்கு எதிராகவே உள்ளது. நிலப்பிரபுத் துவத்தையும் ஏகாதிபத்தியத்தையும் எதிர்த்து நடைபெறும் தமிழ்த் தேசியப் புரட்சியில் இந்திய ஆளும் வர்க்கத்தை எதிர்த்த போராட்டமே மையமான போராட்டமாகும். அந்த வர்க்கப் புரட்சி, நடைபெறும்

போது தமிழகத்தில் உள்ள தமிழ் தரகு முதலாளிகள் வர்க்கமும், நிலப்பிரபுத்துவ வர்க்கமும் அடித்து விரட்டப்படும். அப்போது "வீட்டு எலியை அடித்தால் காட்டெலி தானே பறந்துவிடும்" என்பதற்கேற்ப, தமிழ்த் தேசியப் புரட்சி நடைபெறும் போது தமிழக தரகு முதலாளிகளும், நிலப்பிரபுக்களும் நடைக்கட்டும் போது அவர்களின் ஆதரவில் இருக்கும் பார்ப்பனியமும் பறந்துவிடும்.

எதிர்க்கப்பட வேண்டியது பார்ப்பனியமே தவிர பார்ப்பனர்கள் அல்ல.

ஆரியர் திராவிடர் இனப்பகை பற்றி பேசி பார்ப்பனர்களை தாக்குவதால் தமிழினம் விடுதலை பெற்று விடாது. இது எதிர்க்க வேண்டிய எதிரியை எதிர்க்காமல் தமிழ்த் தேசியப் புரட்சியை திசை மாற்றி விடும் செயலாகும். மேலும் தமிழ்நாட்டில் பார்ப்பனர்கள் இருக்கிறார்கள் என்று சொன்னால், இனத்தால் அவர்கள் ஆரியர் என்றாலும், சாதியால் அவர்கள் பார்ப்பனர்கள் என்றாலும், அவர்களின் குழூவு மொழியாக (அவர்களுக்குள் பேசிக் கொள்ளும் மொழியாக) சமஸ்கிருதம் இருக்கிறது என்றாலும், அவர்களின் வாழ்வியல் மொழியாக தமிழே உள்ளது. அந்த வகையில் தமிழ்த் தேசியம் தமிழ்நாட்டு பார்ப்பனர்களுக்கும் தேவை. அந்த வகையில் பார்ப்பனர்களும் தமிழ்த் தேசியப் புரட்சியில் பங்கேற்பர். பிற தமிழ் சாதியினர் அளவிற்கு பங்கேற்க மாட்டார்கள் என்றாலும் அவர்களும் பங்கேற்பர். அவ்வாறு பங்கேற்க தயாராக உள்ள பார்ப்பனர்களைப் ஒதுக்கக்கூடாது.

அதேநேரத்தில் பார்ப்பனிய எதிர்ப்பில் பார்ப்பனர்களாக உள்ளவர்களின் ஒத்துழைப்பு எந்த அளவிற்கு உள்ளதோ அந்த அளவிற்கே அவர்களின் பங்களிப்பும் இருக்கும்.

**பார்ப்பனிய எதிர்ப்புக்கான முக்கிய அம்சங்களாவன:**

•தமிழினத்தின் மீது ஆரிய இன திணிப்பை எதிர்த்து போராட வேண்டியுள்ளது.

•அரசியலிலும் கல்வியிலும் மதவாதம் தலையிடக்கூடாது -மதகுருமார்கள் தலையீடு என்கிற வகையில், இங்கு மதகுருமார்களாக ஒரு சாதியே- பார்ப்பன சாதியே- உள்ளதால் பார்ப்பனியம் எதிர்க்கப்பட வேண்டும்.

•இங்குள்ள சாதிய சமூக அமைப்பில் எல்லா சாதியினருக்கும் மேலான சாதியினராய் பார்ப்பனர்கள் இருந்து கொண்டு சாதி ஆதிக்கம் செய்வதால் பார்ப்பனியம் எதிர்க்கப்பட வேண்டும்,

•வரலாற்றில் எல்லா காலத்திலும் சுரண்டல் வகுப்பாளர்களுக்கும் ஆதிக்க சக்திகளுக்கும் ஆளும் வர்க்கத்துக்கும், பார்ப்பனியம் துணை போய்க் கொண்டிருப்பதாலும் உழைக்கும் வர்க்கங்களுக்கும், அடித்தட்டு மக்களுக்கும் எதிராய் பார்ப்பனியம் இருப்பதாலும், வர்க்கப் புரட்சிக்கு -தேசியப் புரட்சிக்கு எதிராக பார்ப்பனியம் வருவதாலும், பார்ப்பனியம் எதிர்க்கப்பட வேண்டியுள்ளது.

இந்த நான்கு அம்சங்களையும் கவனத்தில் எடுத்துக் கொண்டு, பார்ப்பனியம் எதிர்க்கப்பட வேண்டுமே தவிர பார்ப்பனர் எதிர்ப்பே முதன்மையாக கூறிக்கொண்டு தமிழ்த் தேசியப் புரட்சியை கோட்டைவிட்டு விடக்கூடாது.

-தோழர் சு (எ) சுந்தரம்

*தமிழ்த் தேசிய அரசியல் ஆசானும், தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சி (மா. லெ) யின் தலைவருமான தோழர் சு (எ) சுந்தரம் அவர்களின், இரண்டாமாண்டு செவ்வணக்க நிகழ்வு ஜூன் 9 அன்று காலை 10 மணிக்கு அவரது சொந்த ஊரான கடலூர் மாவட்டம், காட்டுமன்னார்குடி வட்டம், நத்தமலை கிராமத்தில் நடைபெற்றது. இதில் மார்க்சியப் பெரியாரிய பொதுவுடைமை கட்சியின் சார்பில் தோழர் வெட்னரி பரமசிவம் அவர்களும், தோழர் சோழன்குறிச்சி தங்கவேல் அவர்களும், தமிழக வாழ்வுரிமைக் கட்சியின் சார்பில் தோழர்கள் உ.கண்ணன், பாலகுருசாமி, ரவி மகேஷ் ஆகியோரும், தமிழ்த்தேச மக்கள் கட்சியின் சார்பில் தோழர் பரமசிவம் அவர்களும், தமிழக ஒடுக்கப்பட்டோர் விடுதலை இயக்கத்தின் சார்பில் தோழர்கள் செந்தீ. நாகவரசன், தாஸ் ஆகியோரும், தமிழ்த் தேசியப் பாதுகாப்பு இயக்கத் தோழர்கள் அனைவரும் மற்றும் ஊர் பொதுமக்களும் கலந்து கொண்டு தோழர் சுந்தரத்திற்கு செவ்வணக்கம் செலுத்தினர்.*




# பொன்பரப்பியில் நடத்தப்பட்டது, தேர்தல் கலவரம் அல்ல! சாதிக் கலவரமே!

வரலாறு யாவும் வர்க்கப் போராட்ட வரலாறே!

சிமெண்ட் உற்பத்தி தொழிற்சாலை நிர்வாகங்கள், அவற்றின் ஒப்பந்ததாரர்கள், அவர்களிடம் இருந்து பணம் பெறுகின்ற தரகு முதலாளித்துவ கட்சிகள் ஒரு வர்க்கமாகவும் (சுரண்டும் வர்க்கமாகவும்) சிமெண்ட் ஆலைகளிடம் நிலத்தை இழந்து, அவற்றினால் ஏற்படும் வறட்சியாலும் சுற்றுச்சூழல் சீர்கேட்டினாலும் பாதிக்கப்படும் உழவர்கள் மற்றும் கூலித் தொழிலாளர்கள் ஒரு வர்க்கமாகவும் (சுரண்டப்படும் வர்க்கமாகவும்) உடைய மக்களை கொண்டது அரியலூர் மாவட்டம். இவ்விரு வர்க்கங்களுக் கிடையேயான போராட்டமே தற்கால அரியலூர் மாவட்டத்தின் வரலாறாக உள்ளது. அப்படி இத்தொழிற்சாலைகளால் சுரண்டப்படும் உழவர்களையும் கூலித் தொழிலாளர்களையும் பிரித்தாளும் சூழ்ச்சியின் ஒரு அங்கமே அரியலூர் மாவட்டம், பொன்பரப்பியில் நடத்தப்பட்ட சாதிக் கலவரமாகும்.

வன்னியர் சங்கத்தின் சாதிவெறிக் கொள்கைக்கு பலியான பொன்பரப்பி, சிறுகளத்தூர், குடிக்காடு உள்ளிட்ட கிராமங்களை சேர்ந்த வன்னியர் சமூகத்தினர் சிலர் கடந்த ஏப்ரல் 18 ( நாடாளுமன்ற தேர்தல் நடத்தப்பட்ட நாள் ) அன்று பொன்பரப்பி தாழ்த்தப்பட்டோர் குடியிருப்பு பகுதிகளில் புகுந்து சாதிவெறித் தாக்குதல் நடத்தி உள்ளனர். இத்தாக்குதல் சம்பவம் செல்போனில் படம் பிடிக்கப்பட்டு காணொளியாக அனைத்துச் சமூக வலைத்தளங்களிலும் வலம் வந்தது.

உண்மையில் நடந்தது என்ன? நடந்து முடிந்த பாராளுமன்ற தேர்தலில் சிதம்பரம் தொகுதியில் வி.சி.க. சார்பில் அதன் தலைவர் திருமாவளவன் வேட்பாளராக நிறுத்தப்பட்டார். இதனையொட்டி பா.ம.க.வினர் வி.சி.க.வின் கூட்டணியில் இருந்த தி.மு.க வை சேர்ந்த வன்னியர்களை அவமதிக்கும் விதத்தில் பல்வேறு சதிச்செயல்களில் ஈடுபட்டனர். அவற்றில் ஒன்றுதான் பொன்பரப்பியில் உள்ள வன்னியர் சமூகத்தை சேர்ந்த தி.மு.க.வினரின் வீடுகளுக்கு முன்பு திருமாவளவனுக்கு அளிக்கப்பட்டச் சின்னமான 'பானை'யை சாலையில் போட்டு உடைத்தது. மேலும் இவர்கள் வாக்கு பதிவு மையங்களுக்குச் செல்லும் வழிகளிலும் பானைகளை போட்டு உடைத்தனர். இதனை அறிந்த தாழ்த்தப்பட்டோர் குடியிருப்புப் பகுதியை சேர்ந்த சிலர், அப்பகுதியில் சட்ட விரோதமாக மது விற்றுக்கொண்டிருந்த வன்னியர் சமூகத்தை சேர்ந்த மாற்றுத்திறனாளி இளைஞரை அப்பகுதியை விட்டு வெளியேறச் சொல்லினர். அம்மாற்றுத்திறனாளி இளைஞர், வன்னியர் சமூகத்தைச் சேர்ந்த சிலருக்கு செல்போனில் தகவல் கொடுக்க, வன்னியர் சமூகத்தைச் சேர்ந்த 4 பேர் அப்பகுதிக்கு சென்றனர். அப்படி சென்றவர்களுக்கும் அங்கிருந்தவர்களுக்கும் இடையில் வாக்குவாதம் முற்றவே அங்கு பெட்டிக்கடையில் இருந்த மோர் பானையையும் வன்னியர் தரப்பினர் போட்டு உடைத்தனர். இதனை கண்ட அப்பகுதி மக்கள் ஆத்திரமடைந்ததால் கைகலப்பாகி அதில் தாழ்த்தப்பட்டோர் தரப்பில் சிலரும் வன்னியர் தரப்பில் இருவரும் தாக்கப்பட்டனர். அதில் ஒருவர் தலையில் இரத்தம் வழியவழிய வாக்கு சாவடிக்கு வந்து வன்னியர் சமூகத்தினரிடம் முறையிடவே, அவர்கள் அங்கிருந்த வன்னியர் தரப்பு இளைஞர்களைத் திரட்டிக்கொண்டு தாழ்த்தப்பட்டோர் குடியிருப்புப் பகுதியை நோக்கிச் சென்றனர். அதனை கண்டத் தாழ்த்தப்பட்டோர் அங்கிருந்து தப்பிவிடவே,

அங்கிருந்த வீடுகளையும் வாகனங்களையும் தாக்கிவிட்டு வன்னியர் தரப்பினர் அங்கிருந்துத் திரும்பி விடுகின்றனர். அவர்கள் திரும்பி வந்ததும் குடிக்காட்டில் முகாமிட்டிருந்த வன்னியர் சங்கத் தலைவர் வைத்தி மாவட்ட காவல் கண்காணிப்பாளர் அலுவலகத்திற்கு தகவல் கொடுத்து காவல்துறையை சம்பவ இடத்திற்கு வரவழைத்தார்.

தப்பி சென்ற தாழ்த்தப்பட்டவர்கள் சுற்றுப்புற பகுதியில் இருந்த வி.சி.க.வினருக்கும் தி.மு.க.வினருக்கும் தகவல் கொடுத்தனர். அதன்படி தி.மு.க முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்கள் சிவசங்கர் மற்றும் ஞானமூர்த்தி அப்பகுதிக்கு வந்தனர். அவர்கள் அங்கு வந்து பார்த்ததும் சேதாராம் குறைவாக உள்ளதைக் காரணம் காட்டி மேலும் சில வீடுகளில் உள்ள ஓடுகளை உடைக்க ஆணையிட்டனர். இச்சம்பவத்தில் காயம்பட்ட மற்றும் காயம்படாத சிலரையும் மருத்துவமனையில் சேர்த்தனர். இவைதான் நடந்தது.

தாழ்த்தப்பட்டோர் பகுதியில் தாக்குதலை முடித்துவிட்டு வன்னியர்கள் திரும்பிய சிறிது நேரத்தில் காவல்துறை தாழ்த்தப்பட்டோர் பகுதியை மட்டும் சூழ்ந்துகொண்டது. அன்று முதல் தாழ்த்தப்பட்டோர் குடியிருப்பு பகுதி கண்காணிப்புக்கும் தணிக்கைக்கும் உள்ளாக்கப்பட்டுள்ளது. தாழ்த்தப்பட்டோர் பகுதிக்கு, நிவாரணப்பொருட்களை அளிப்பவர்கள் மற்றும் தேர்தல் அரசியல் தலைவர்கள் தவிர வேறு எவரும் அப்பகுதிக்கு உள்ளே சொல்ல அனுமதிக்கப்படவில்லை. அப்படியே அனுமதிக்கப்பட்டாலும் கடுமையான விசாரணைக்குப் பின்னரே ஒருசிலர் அனுமதிக்கப்படுகின்றனர்.

காடுவெட்டி குருவின் மரணத்திற்கு பின்னர், வன்னியர் சங்கத்தின் தலைமை பொறுப்பிற்கு வந்தவர்கள் தங்களை பலமாக வளர்த்துக்கொள்ளும் நோக்கத்திற்காகவே இத்தகைய கலவரம் தொடங்கப்பட்டிருக்கிறது. இச்சம்பவத்தில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வன்னியர் சங்கம் எதிரியாக செயல்பட்டு வந்தது அனைவரும் அறிந்ததே. உண்மையென்னவெனில் ‘வன்னியர் சங்கம் எந்த அளவிற்கு தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எதிரியோ அதே அளவிற்கு வன்னியர் சமூகத்தில் உள்ள உழைக்கும் மக்களுக்கும் எதிரியாக விளங்குகிறது’.

அதேபோல் பெயரளவில் சாதியொழிப்பை அடிப்படையாகக்கொண்ட வி.சி.க.வோ பறையர் சமூகத்தை சாதிய ரீதியாக அணிதிரட்டிக்கொண்டு பறையர் அல்லாத மற்ற தாழ்த்தப்பட்ட சாதி மக்களை தாக்குவதிலுமே முனைப்பாக உள்ளது. வன்னியர் சங்கமும் பா.ம.க.வும் எந்த அளவிற்கு வன்னியர் சாதிவெறியை விதைத்து மக்களை வர்க்க ரீதியாக அணிதிரள விடாமல் செய்கின்றதோ, அதே அளவிற்கு அல்லது அதைவிடச் சற்று குறைவான அளவிற்கு வி.சி.க.வும் பறையர் சமூகத்திடம் சாதிவெறியை விதைத்து ( தன்னைவிட மேல் சாதியினரிடம் சாதி ஒழிப்பையும் தன்னைவிட கீழ் சாதியிடம் சாதியினரிடம் வெறியையும் கொண்டு) வர்க்க ரீதியாக அணிதிரள விடாமல் தடுக்கிறது.

இவ்விரு அமைப்புகளும் தமிழ்நாட்டின் வடக்குப் பகுதியில் வசிக்கும் பெருவாரியான உழைக்கும் மக்களை சாதிய ரீதியாக பிரித்து அவர்களை, அவர்களின் பிரச்சினைகளுக்கு எதிராகப் போராட விடாமல் சாதிய மோதல்களில் ஈதுபடுத்துவதிலேயே முனைப்பாக உள்ளன. இதில் வன்னியர்களுக்கு சாதிவெறியை உபதேசிக்கும் கிருஷ்ண பரமாத்மாவான இராமதாசும் பறையர்களுக்கு இளைப்பாறுதல் தரும் இரட்சகரான திருமாவளவனும் ஒருவருக்கொருவர் சளைத்தவர்கள் அல்ல.

பொன்பரப்பியை பொறுத்தவரை, இப்பகுதி அரியலூர் மாவட்டத்தைச் சேர்ந்தது என்றாலும் கடலூர் மாவட்டத்தின் சிதம்பரம் நாடாளுமன்ற தொகுதியுடனேயே இணைக்கப்பட்டுள்ளது. சட்டமன்ற தொகுதி அடிப்படையில் பெரம்பலூர் மாவட்டத்தின் குன்னம் தொகுதியுடனேயே இணைக்கப்பட்டுள்ளது. இம்மக்கள் ‘தேர்தலில் போட்டியிடும் வேட்பாளர்களிடம் கூட சிமெண்ட் ஆலைகளை எதிர்த்து கோரிக்கைகளை வைத்துவிடக்கூடாது’ என்பதில் தெளிவாகவே அரசும் சிமெண்ட் ஆலைகள் நிர்வாகங்களும் உள்ளன . இவை போதாததென்று இப்பகுதி மக்களை சாதிய ரீதியாகவும் பிரித்தாளுவதற்கான (ஒவ்வொரு கிராமத்தையும் தனக்கு எதிராக எப்போதும் சேர முடியாத இரு பகுதிகளாக பிரிப்பதற்கான) சூழ்ச்சியின் ஒரு பகுதியே இச்சாதிவெறிக் கலவரமாகும்.

இக்கலவரத்தின் மூலம் ஒருபுறம் வன்னியர் சங்கத் தலைவரும் மற்றும் இந்து முன்னணி பொறுப்பாளரும் மறுபுறம் தி.மு.க.வின் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்களும் தங்களின் செல்வாக்கை அரியலூர் மாவட்ட மக்களிடம் வளர்த்துக்கொள்ள முயலுகின்றனர். இவர்களின் முயற்சிக்கு அடிப்படையான காரணிகளாக இருப்பது இம்மாவட்டத்தில் கட்டப் பஞ்சாயத்துக்களை செய்வது யார்? என்பதும் சிமெண்ட் ஆலைகளின் ஒப்பந்தங்களை பெறுவதும் அவற்றிற்கு நிலங்களை கையகப்படுத்தி தருவதும் யார்? என்பதற்கான போட்டி தானேத் தவிர மக்களுக்கான நலன் அல்ல. இவர்கள் இவ்விரு சமூக மக்களுக்கு பெற்று தரப்போவது உட்பகையையும் சிறைவாசத்தையும் அடி, உதைகளையும் உயிர் பலிகளையும் தானேத் தவிர இம்மக்களுக்கான விடுதலையை அல்ல.

எனவே, இவர்களிடமிருந்து இம்மக்களை காக்க சாதிகளை கடந்து உழைக்கும் மக்களை வர்க்க ரீதியாக அணிதிரட்டி சிமெண்ட் ஆலைகளின் சுரண்டலுக்கு எதிராக போராட வேண்டியதும், மக்கள் விடுதலையை வென்றெடுக்க வேண்டியதும் நம்முன் உள்ள கடமைகளாகும்.

***வன்னியர் பறையர் உழைக்கும் மக்கள் ஒற்றுமையை பேணிக்காப்போம்!***

***அரியலூர் மாவட்டத்தில் சிமெண்ட் ஆலைகளின் ஆதிக்கத்தையும் சுரண்டலையும் முடிவுக்கு கொண்டுவருவோம்!***

-தோழர்- சுவை.முருகேசன்

# “நம்நாடு தமிழ்நாடு. இந்தியா என்பது அந்நிய நாடு” முழக்கம் சரியானதா?

கடந்தகால அரசியல் போராட்டத்தை அணுகும்போது விமர்சனப் பார்வையுடன் அணுக வேண்டும். அப்படி இல்லாமல் வறட்டுத்தனமாக அணுகினால். கடந்த காலத்தில் நேர்ந்த அதே தவறுகள், மீண்டும் நேரலாம். ஒரு தவறான கருத்து கட்டாயம் தவறான செயல்பாடுகளையும் விளைவிக்கும். ஆனால் எந்த ஒரு இயக்கமும் தோன்றும் பொழுதே நூறு விழுக்காடு சரியான இயக்கமாக தோன்றுவதில்லை. போராட்ட காலங்களில் பல்வேறு பிழைகள் ஏற்படலாம். அவற்றை நாம் திருத்திக்கொண்டு போராடும் போதே அவ்வியக்கம் சரியான பாதையில் செல்ல முடியும்.

“நம்நாடு தமிழ்நாடு இந்தியா என்பது அந்நிய நாடு” என்ற முழக்கம் தோழர் தமிழரசனின் இறப்பிற்குப் பின்னர் இருந்த தோழர்களால் முன்வைக்கப்பட்டது. தோற்றத்தில் மிகச்சிறப்பானதாக நம்மால் பார்க்கப்படும் இம்முழக்கம் அதன் உள்ளார்ந்த பொருளில் எவ்வாறு உள்ளது என்பதை நாம் பார்க்கத் தவறுகிறோம். முதலில் இம்முழக்கத்தை நாம் இரண்டாக பிரிப்போம்.

**“நம் நாடு தமிழ் நாடு”**

ஒரு தேசியம் என்றால் ஒரே மொழி, ஒரே கலாசாரம், ஒரே பூகோளம் ஒரே பொருளாதாரம் கொண்டதாகும். அதன் அடிப்படையில் ஒரு தேசமாகும் . தமிழ்நாட்டு மக்கள், மொழி வழியாகவும் கலாச்சார வழியாகவும் வரலாற்று வழியாகவும் பூகோள ரீதியாகவும் ஒரு தேசிய இனத்தவர் ஆவர். அவர்கள் தங்களது சொந்த நாட்டை அமைப்பதற்கான அனைத்து உரிமைகளையும் கொண்டுள்ளனர். இது உலகம் முழுவதும் அனைவரும் ஏற்றுக் கொள்ளும் ஒரு விடயமாகும். பொதுவாக இதனை சுயநிர்ணய உரிமை என்று அரசியல் செயல்பாட்டாளர்கள் வழங்குகின்றனர். தமிழ்த் தேசிய விடுதலை இயக்கத்தை சேர்ந்த தோழர் தியாகு இதனை “தன் தீர்வு உரிமை” என்றும், தமிழ்நாடு மார்க்சிய லெனினியக் கட்சியை சேர்ந்த தோழர் கார்முகில் இதனை “தன்நிலைத் தீர்வு உரிமை” என்றும், தமிழ்த் தேசியப் பேரியக்கத்தை சேர்ந்த தோழர் மணியரசன் இதனை “தன்னுரிமை” என்றும் வகைப்படுத்துகின்றனர். ஆனால் தோழர் தமிழரசன் இதனை ‘தனிநாட்டுரிமை’ என்று வகைப்படுத்தினார். இதனை முன்வைத்தே “தனிநாட்டுரிமைக்காய் போராடுவோம்” என்ற அறிக்கையையும் எழுதி வெளியிட்டார். பின்னர் அவ்வுரிமைக்காக ஆயுதம் தங்கி போராதாவும் செய்தார். அந்த வகையில் “நம் நாடு தமிழ்நாடு” என்னும் முழத்தை தோழர் தமிழரசனின் வழியில் தமிழ்த் தேசிய விடுதலைக்காகப் போராடும் ஓர் இயக்கம் முன்வைப்பது சரியானதாகும். அதே சமயத்தில் இதன் பிற்பாதி முழக்கத்தை பார்ப்போமேயானால்,

**“இந்தியா என்பது அந்நிய நாடு”**

ஹிஸ்புல்லாவின் கோட்பாட்டாளர் நஸ்ருதீன், இஸ்ரேல் அரசு உடனான பேச்சுவார்த்தை என்பதை மறுக்கும் போது, அதற்கான விளக்கமாக, “ நாங்கள் இஸ்ரேல் என்னும் தேசத்தின் இருப்பை ஒருபோதும் ஏற்பதில்லை. எனவே இஸ்ரேலுடனான எந்த பேச்சுவார்த்தைக்கும் இடமே இல்லை” என்பார். இதை நாம் இந்திய கட்டமைப்போடு ஒப்பிடும்போது, வரலாற்றில் ஐரோப்பியர் வருகைக்கு முன்னர் இன்று இருப்பதைப் போன்ற ஒரு இந்தியா இருந்ததே இல்லை. இன்றைய இந்தியாவும் இலங்கையும் பாகிஸ்தானும் பர்மாவும் பங்களாதேஷும் வெள்ளையரின் துப்பாக்கி முனையில் அவர்களின் வியாபார தேவைகளுக்காக ஒற்றை கட்டமைப்பாக ஒருங்கிணைக்கப்பட்டு, பின்னர் நிர்வாக வசதிக்காக தனித்தனியாக பிரிக்கப்பட்டன.

இவற்றில் பாகிஸ்தானின், கிழக்குப் பாகிஸ்தானாக இருந்த பங்களாதேஷ் மட்டும் மொழிவழி தேசிய விடுதலைக்காகப் போராடி (முதலாளித்துவ தேசிய விடுதலைப் போராட்டத்தை நடத்தி) தனி நாடாக உள்ளது. ஆனால் மேற்கு பாகிஸ்தானிலும் (தற்போது உள்ள பாகிஸ்தான்), பர்மாவிலும், இலங்கையிலும், இந்தியாவிலும் பல்வேறு தேசிய இனங்களின் விடுதலைப் போராட்டங்கள் இன்றுவரை நடந்து கொண்டே இருக்கின்றன. உண்மையில் இத்தேசிய இன விடுதலைப் போராட்டங்களும் அவற்றின் மீதான இவ்வரசுகளின் ஒடுக்குமுறைகளுமே தெற்கு ஆசிய கண்டத்தின் வரலாறாக இருபதாம் நூற்றாண்டின் பிற்பாதி முதல் இன்று வரை தொடர்கிறது.

இந்திய துணைகண்டத்தில் காஷ்மீரி, பஞ்சாபி, நாகா, மணிப்பூரி, தமிழ் உள்ளிட்ட பல்வேறு தேசிய இனங்கள் தங்களது தேசிய விடுதலை கோரிக்கைகளை முன்வைத்துப் போராடி வருகின்றனர். தமிழ்நாட்டைப் பொறுத்தவரை தமிழ்த் தேசிய இனத்தின் பாட்டாளி வர்க்கம் அதற்கான தலைமையேற்று 80கள் முதல் போராடி வருகின்றது. மற்ற தேசிய இனங்கள் தமது சொந்த தேசிய இனத்தின் விடுதலைக்கு மட்டுமே போராடி வந்த வேளைகளில், தமிழ்த் தேசிய இனம் மட்டும் சற்று முன்னேறி இந்திய துணைகண்டத்தில் உள்ள அனைத்து தேசிய இனங்களின் விடுதலைகாகவும் குரல் கொடுத்ததை யாராலும் மறுக்க முடியாது.இதனை முன்வைத்துதான் தோழர் தமிழரசனின் “இந்தியாவில் தேசிய இனங்களின் விடுதலை” என்ற அறிக்கை பெண்ணாடம் மாநாட்டில் வெளியிடப் பட்டது .

அக்காலம் முதல் தற்போது வரை தமிழ்த் தேசிய இனம் இந்தியாவில் உள்ள அனைத்து தேசிய இனங்களின் விடுதலைக்கும் குரல் கொடுத்து வருகிறது. இதனை நாம் தற்காலத்தில் நடக்கும் போராட்டங்களிலும் காண முடியும். ஹிஸ்புல் முஜாஹிதீன் இயக்கத்தின் தளபதியான புர்கான் வானி கொல்லப்பட்ட சூழலில் எழுந்த காஷ்மீரி மக்களின் எழுச்சியை, மற்ற எந்த தேசிய இன மக்களை விடவும் தமிழ்த் தேசிய இனத்தின் மக்கள் அதிகம் ஆதரித்தனர். பஞ்சாபி தேசிய இனத்தின் கோரிக்கையான "காலிஸ்தான் 2020" எனும் முழக்கத்திற்கும் இங்கு ஆதரவு குரல்கள் எழுகின்றன. இந்திய துணைக்கண்டத்தின் வடகிழக்கு பகுதிகளில் தேசிய விடுதலைப் போராட்டத்தை ஒடுக்கும் சட்டமான 'சிறப்பு ஆயுதப்படை சட்டத்தை' எதிர்த்தும் தமிழ்நாட்டு மாணவர்களால் போராட்டங்கள் நடத்தப்பட்டன.

இப்படி இந்நாள் வரையில் இந்தியாவில் அனைத்து தேசிய இனங்களின் மீதும் இந்திய ஆளும் வர்க்கத்தால் செலுத்தப்படும் ஒடுக்குமுறைக்கு தமிழ்த் தேசிய மக்கள் எதிர்ப்புக் குரல் கொடுத்தவாறே உள்ளனர்.

தோழர் தமிழரசனின் காலம் முதல் இக்காலம் வரை தமிழ்த் தேசிய இனத்தின் விடுதலைக்காக போராடும் போராட்டக்காரர்கள் இந்தியா எனும் கட்டமைப்பை ஏற்றுக்கொள்வதில்லை. ஆனால் "இந்தியா என்பது அந்நிய நாடு" என்னும் முழக்கம், இந்திய கட்டமைப்பை ஒரு நாடு என ஏற்கும் முழக்கமாக உள்ளது. இந்தியா என்பது எப்போதும் ஒரு நாடல்ல. அது பல்வேறு நாடுகளை ஒடுக்கிச் சுரண்டும் ஒரு சிறைக்கூடமாகும். அச்சிறைக்கூடத்திலிருந்து அனைத்து தேசிய இனங்களும் விடுதலைப் பெற்றாக வேண்டும். அதன் அடிப்படையில் "இந்தியா என்பது அந்நிய நாடு" எனும் முழக்கத்தை தோழர் தமிழரசனின் வழி வந்த ஓர் இயக்கம் முன்வைத்தது தவறானதாகும். இதனை நாம் திருத்திக் கொண்டு தோழர் தமிழரசனின் குரலில் உரக்கச் சொல்வோம் "தேசிய இனங்களின் சிறைக் கூட்டமே இந்தியா " என்று.

-தோழர் சி.தியாகராசன்.


தோழர் க.இராமசாமி


தோழர் தர்மராஜ்


தோழர் ஆதி


தோழர் இராமலிங்கம்

## நினைவு குறிப்பு:

*தோழர் க.இராமசாமி,1985 ஆம் ஆண்டு தனது 16ம் வயதில் வல்லம் முந்திரிக்கொட்டை அறுவடை போராட்டத்தின் மூலம் தோழர் கருணாகரன் அவர்களால் புரட்சிகர அரசியலுக்கு கொண்டுவரப்பட்டவர். அப்போது நடத்தப்பட்ட கலை நிகழ்ச்சிகளில் அதிகமாக பங்கேற்றவர். மருதையாறு வழக்கில் சாட்சிகளாக சேர்க்கப்பட்டு, சாட்சி கூறாத காரணத்தினால் காவல் துறையால் நீதிமன்ற வளாகத்திலேயே கடுமையாக தாக்கப்பட்டார். தமிழநாடு கம்யூனிஸ்ட் கட்சி (மா. லெ)யின் வெகுமக்கள் அமைப்பான தமிழ்நாடு முற்போக்கு சிந்தனையாளர் எழுச்சி மன்றத்தில் பணியாற்றினார். இவரோடு தோழர்கள் தர்மராஜ், ஆதி, நன்னி.இராமலிங்கம் ஆகியோரும் அமைப்பில் பணியாற்றினார்.*

*1994 ஆம் ஆண்டு ஜெயங்கொண்டம் நிலக்கரி திட்டத்தை நடைமுறைப்படுத்த அரசு முயன்ற போது, செப்டம்பர் 1, தோழர் தமிழரசன் நினைவு நாளில், திட்டத்தை நடைமுறை படுத்துவதற்கு முன்பாக ஜெயங்கொண்டத்தில் தொழிற்கல்வியை தொடங்கு, நிலத்தை அளிக்கும் விவசாயிகளின் குடும்பத்தினர் ஒருவருக்கு தொழிற்கல்வி அளித்து வேலை வழங்கு, திருவண்ணாமலையில் மாற்று மனை வழங்கும் திட்டத்தை கைவிட்டு ஜெயங்கொண்டம் பகுதியிலேயே அரசு புறம்போக்கு நிலங்களில் மாற்று நிலமும் - மாற்று மனையும் வழங்கு, நிலத்திற்கான இழப்பீட்டுத் தொகையை உயர்த்தி வழங்கு. நிலக்கரி வெட்டப்படும்போது வெளியேற்றப்படும் நீரை நீரேற்றுமுறையில் மேற்கு நோக்கி பாசனத்திற்காக பாயவிடு, உள்ளிட்ட கோரிக்கைகளை முன்வைத்து பேரணி நடைபெற்றது. மேலும் முள்ளுகுறிச்சி, புதுப்பாளையம், சூரிய மணல் போன்ற கிராமங்களில் கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்றது. மேற்கண்ட போராட்டங்களில் தோழர்களின் பங்கு அளப்பரியது. அவர்களுக்கு தமிழ்த் தேசியப் பாதுகாப்பு இயக்கம் தனது செவ்வணக்கத்தை செலுத்துகின்றது.*

உலகத் தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்!





சோசலிச நெறி
தமிழ்த் தேசியம்
புதிய சனநாயகம்
உழவர் திட்டம்
புதிய சமூகநீதி

தேசிய இனங்களின் விடுதலை வெல்க!!



தமிழ்த் தேசிய விடுதலைப் போராளி

தோழர் **புலவர் கலியபெருமாள்** அவர்களுக்கு




12 ஆம் ஆண்டு

# செவ்வணக்கம்

## தமிழ்த் தேசியப் பாதுகாப்பு இயக்கம்

95247 09860 tnpmov tnsenkodi.blogspot.com

உலகத் தொழிலாளர்களே ஒன்று சேருங்கள் !

தேசிய இனங்களின் விடுதலை வெல்க !!





தமிழ்த் தேசிய அரசியல் ஆசான்

தோழர் சு (எ) சுந்தரம் அவர்களுக்கு

இரண்டாம் ஆண்டு

# செவ்வணக்கம்

ஜூன் 9



தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்ட அரசியலை முன்னெடுக்காமல் தமிழ்நாட்டில் ஒருவன் கம்யூனிஸ்ட்டாய் இருக்க முடியாது. ஒரு கம்யூனிஸ்ட் கட்சி இல்லாமல் தமிழ்த் தேசிய விடுதலையையும் வெல்ல முடியாது.

தோழர் சு (எ) சுந்தரம்

**தமிழ்த் தேசியப் பாதுகாப்பு இயக்கம்**